# ஸோமஸுந்தரம்



இஃது

வைத்தியநாத ஐயர் எம்.ஏ., பி.எல்., அவர்கள்

இயற்றியது.





லலிதா விலாச புத்தக சாலை

திருவல்லிக்கேணி, சென்னை

1918

 [விலை அணா 4



# ஸோம ஸுந்தரம்

## அத்தியாயம் 1

க்ரிஸ்து சகாப்தம் 1816-ம் வருஷாரம்பம்.

பங்காளத்தில் மார்க்விஸ் ஆப் ஹேஸ்டிங்ஸ் என்ற ப்ரபு இந்திய கவர்னர் ஜனரலாக விருந்தார். இவர் காலத்தில் தான் மத்ய இந்தியாவில் ஜனங்களுக்கு மிகுந்த அஸௌகர்யங்களைச் செய்துகொண்டும் அவர்களுடைய பொருள்களைச் சூறையாடியும், வீடுகளிலும் வயல்களிலும் நெருப்பு வைத்துக் கொளுத்தியும், எதிர்ப்பவர்களை யிறக்கமின்றிக் கொன்றும் பலவிதங்களில் ஹிம்ஸை செய்துவந்த பிண்டாரி* யார் என்னும் ஜாதியார் வேரோடறுக்கப் பட்டனர் என்று ஒருவேளை நீங்கள் அறிந்திருப்பீர்கள்.

[* மொகலாய ராஜ்யம் க்ஷீணகதி யடைந்து அற்றுப் போகவும், அந்தச் சக்ரவர்த்திகளிட மிருந்து வேலைபார்த்து வந்த போர்ச் சேவகர்களுக்குத் தொழிலில்லாமற் போய் விட்டது. இவர்கள் ஆதிமுதல் போர்ச் சேவகர்களாகவே காலக்ஷேபம் செய்தவர்களாகையால், வேறு ஜீவனோபாயம் தேடிக்கொள்வதற்கும் சக்தியற்றவர்க ளானார்கள். இவர்களுக்குக் கொள்ளை யடிப்பதென்பது நிருடியாய்த் தெரிந்த பாடம். ஆதலால், இத்தொழில் மிகவும் சுலபமானதென்று கைக்கொண்டார்கள். இவர்களோடு மகாராஷ்ட்ர ஸேனையி

விருந்து விடுபட்டு வந்தவர்களென்ன, ஜாட்டர்கள் என்ற ஓர்வகை ராஜபுத்ர ஜாதியாரென்ன, ஆப்கானியரென்ன, முதலிய பலஜாதியார்களும் ஒன்றுசேர்ந்து கொண்டார்கள். இவர்களுடைய் தொகை அபாரம். வெகு வேகமாய்ச் செல்லக்கூடிய சிறு குதிரைகளி லேறிக்கொண்டு, சிறு கூட்டங்களாக ஸஞ்சரிப்பார்கள். இவர்கள் ஒரு க்ராமத்திற்குள் ப்ரவேசிப்பதானல் முதலில் ஒருபுறத்தில் தீயைவைத்து விடுவார்கள். இதனல் குழப்பம் உண்டாகி ஜனங்கள் ஒருபுறமாகக் கூட்டங்கூடி யிருக்கும் ஸமயம்பார்த்து, இன்னொரு புறமாக நுழைந்து கொள்ளை யடித்துக்கொண்டு போய்விடுவார்கள். இவர்கள் வருவதும் போவதும் வெகு ஜல்தி. இக்கூட்டத்தாருக்குத்தான் பிண்டாரி ஜாதியார் என்று பெயர். இக்காலத்தில் மத்ய இந்தியாவில் ஸுமார் லக்ஷம் பெயர் வரை இந்த ஜாதியார் அங்கு மிங்குமாய் உலாவிக்கொண்டிருந்தனர்].

இந்த ஜாதியாரை நிர்மூலமாக்கினுலொழிய இந்தியாவிற்கு க்ஷேமமில்லை யென்பதைச் செவ்வனே யுணர்ந்த ஹேஸ்டிங்ஸ் ப்ரபு, மூன்று ராஜதானிகளி லிருந்தும் அதுவரை கண்டறியப்படாததான வொரு பெரிய ஸேனையைச் சேகரம்செய்ய வெண்ணினர். அவர்செய்த உத்திரவினுதியாக, சென்னை ராஜதானியிலிருந்து (General Hislop) ஜெனரல் ஹிஸ்லப் என்பவர் வடக்கு நோக்கிப் புறப்பட்டார். நர்மதை நதியைத் தாண்டி, வடக்கே சம்பல் என்ற நதிவரை பிண்டாரியரைக் கொண்டுபோய் விரட்டிவிட்டு வரும்படி இவருக்கு உத்திரவு. இவருடைய படையில் ஸோமஸுந்தரம் என்றொரு வாலிபனிருந்தான். அவனே நம்முடைய கதாநாயகன்.

ஸோமஸுந்தரத்திற்கு வயது இருபத்திமூன்றிருக்கும்.

நல்ல கட்டுள்ள சரீர முடையவன். முகத்தில் ஒரு வசீகர சக்தியுமிருந்தது. இவனுக்குப் பதினெட்டாவது வயதில், தகப்பனார் இறந்துபோனார். மிகவு மெளிய வம்சமாகையால் வயதுசென்ற தாயுமவனும் ஜீவனஞ்செய்வது மிகவும் கஷ்ட ஸாத்தியமாயிற்று. கஷ்டமோ நிஷ்டூரமோ வெளியில் சொல்லாமல் இரண்டு வருஷம் கழித்தார்கள். ஏதாவது ஒரு ஜீவனோபாயம் தேடிக் கொண்டாலொழிய, இனிமேல் நிர்வஹிக்க முடியாதென்று ஸோமஸுந்தரம் கண்டான்.

அவன் படித்தவனில்லை. ஆனாலும் புத்திசாலி. அவனுடைய தகப்பனார் ஜீவகாலத்தில் இவனுடைய படிப்பைப் பற்றிக் கொஞ்சமும் கவனிக்கவில்லை. அவருக்கும் வரும்படி ஸ்வல்பந்தான். அதிலேதாவது கொஞ்ச நெஞ்ச மிஞ்சக் கூடியது துர்விநியோகம் செய்யப்படும். படிப்பில்லாதவனுக்கு ஜீவனோபாயம் கஷ்டமல்லவா ? முடிவாய் ஸைந்யத்தில் சேருகிறதென்று தீர்மானித்து, அப்படியே செய்தான். தாய்க்கு அவன் அவ்விதம் செய்வதில் த்ருப்தி யில்லை. அதற்கென்ன செய்யலாம் ? அவச்யத்தை முன்னிட்டு ஸம்மதித்தாள்.

ஸோமஸுந்தரம் ஸேனாவீரனாகி, மூன்று வருஷகாலமாயிற்று. ஸேனையிலுள்ள யாவரும் இவனிடம் மிகப்பிரியமாகவே யிருந்தார்கள். வருஷத்திற்கு வருஷம் அவன் சம்பளம் உயர்த்தப் படாமலிருப்பதில்லை. கொஞ்சம் ஸௌகர்யமான ஸ்திதியிலே யிருந்து வந்தான். கையில் 200-ரூபாய் வரையில் மீதமும் வைத்திருந்தான்.

தாயாருக்கு முதிர்ந்தவயது: வரவர துர்ப்பல மதிகரித்துக்கொண்டேவந்தது. அவளுக்கும் நாமின்னும் வெகுகாலம் ஜீவித்திருக்கமாட்டோமென்று தோன்றிற்று. குழந்தைக்கு எப்படியாவது கல்யாணம் செய்து பார்த்துவிட்டு

இறக்கவேண்டுமென்று அவளுக்கு நெஞ்சுமட்டும் ஆசை. ஆனால் பெண்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. இந்த ஸமயந் தான் பிண்டாரியுத்தத்தை யுத்தேசித்து ஸோமஸுந்தரம் வடக்கே ப்ரயாணமாகும்படி நேர்ந்தது.

ஸோமஸுந்தரம் தாயிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு புறப்பட்டான். ஒருவரையொருவர் உயிரெனநேசித்த இரு வர் பிரிவை எப்படி வர்ணிக்கலாகும்? பிரிந்தார்கள். அவ் வளவுதான்.

பிண்டாரியர்களைத் துரத்தியடிப்பதில் மகாதீரனெனப் பெயர் வாங்கினான். கொஞ்சங்கூட நெஞ்சில் பயங்கிடை யாது. அவனுடைய தைரியத்தைக்கண்ட அவனிருந்த ஸேனுபாகமே மிகுந்த தைர்யமுள்ளதென்று வெகு சிக்கிரத் திற் பெயர் பெற்றது.

எல்லோரும் நர்மதை நதியைத் தாண்டி, அந்தப்புறம் பாளையமிறங்கி யிருந்தார்கள். ஒருநாள் வழக்கம்போல அஞ்சலில், தளகர்த்தருடைய 'மெட்ருஸ் மெயில்பை' (கடிதங்கள்) வந்தது. அதை யவர் பார்த்துக்கொண்டிருக் கும்பொழுதே, அதில் ஸோமஸுந்தரத்திற் கொருகடிதம் வந்திருந்தது. உடனே, ஹிஸ்லப்துரை ஸோமஸுந்த ரத்தை யழைத்துவரும்படியாளனுப்பினர். இரண்டு நிமிஷத் திற்கெல்லாம் ஸோமஸுந்தரம் தளகர்த்தன் கூடாரத்தில் வந்து நின்றான்.

"ஸோமஸுந்தரம்! உனக்கு ஒரு கடிதம் வந்திருக் கிறது. உன்னுடைய தாயார் எழுதினதாயிருக்குமோ?" என்று சொல்லிக்கொண்டே அவனிடம் கடிதத்தை நீட்டி னர்.

வெள்ளைக்காரன் இவ்வளவு சுத்தமாய் தமிழ்பேசினனை யென்று நினைக்கிறீர்களோ? அவன் அப்படிப்பேசவில்லை.

அவன் பேசினமாதிரியே யெழுதுவது ரஸிகஜன ஸம்மதமா யிராதென்று, அவன் சொன்னவார்த்தைகளின் தாத்பர் யத்தையடக்கி நானே யெழுதினேன்.

" எனக்குக் கடிதமெழுத வேறு யாரிருக்கிறார்கள், ஸாஹேப் " என்று சொல்லிக்கொண்டே கடிதத்தை வாங் கிக்கொண்டு, ஸலாம்செய்து வெளியே புறப்படலானான்.

துரையவனை நிறுத்தி " அப்பா ! அதில் என்ன எழுதியிருக்கிறது? அதை வாசித்துப்பாரேன் " என்றான்.

" ஸாஹேப் ! எனக்கு வாசிக்கத் தெரியாதே ! " என்றான் ஸோமன்.

" இங்கே கொண்டா நான் வாசிக்கிறேன் உனக்காக " என்று துரை நீட்டின கையில் கடிதத்தை ஸோமன் கொடுத் தான்.

கடிதம் தமிழில் எழுதப்பட்டிருந்தது. துரைக்குத் தமிழ்தெரியும். வெகு ச்ரமப்பட்டு வாசித்தார். அதில், அவனுடையதாயார், தனக்குவயது மிகுந்ததாகையால், மகனைவிட்டுப் பிரிந்திருக்க ஸஹிக்கவில்லையென்றும், திரும்பி வந்து தன்னைத் தஹனம் செய்துவிட்டுப் பிறகு வேண்டு மென்றால் ஸோமன் ஸைந்யத்தில் சேர்ந்துகொள்ளலாமென் றும், அவனுக்கு இனத்தாரில் ஒருவர் ஒருபெண் கொடுப்ப தாகச் சொல்வதாகவும், அந்தப்பெண் தகப்பனுக்கு ஒரே குழந்தையென்றும், அது சொத்துள்ளவிடமென்றும், அந் தப்பெண்ணை விவாஹம் செய்துகொண்டால் பிறகு ஸைந் யத்தில் சேர்ந்து வேலைபார்க்கவேண்டிய அவசியம் நேரா தென்றும், ஆகையால் ஸேனையைவிட்டு விட்டு உடனே புறப் படவேண்டுமென்றும் எழுதியிருந்தது.

இக்கடிதத்தைத் துரை வாசித்துக்கொண்டு வரும் பொழுது ஸோமஸுந்தரத்தினுடைய முகபாவங்கள் மாறிக்

கொண்டே வந்ததை துரை கவனிக்காமல் போகவில்லை. முதலில் அவன் முகம் துக்கம் நிறைந்திருந்தது. பிறகு முகத்தில் ப்ரகாசம் உண்டாயிற்று. அதன் பிறகு கண்ணீர் ததும்பிற்று. அந்த ஸமயம் துரை ஸோமன் முகத்தைப் பார்த்ததுதான் அவனுக்குத் தெரியும். ஜடிதியில் கண்ணீரைத் துணியால் துடைத்துக்கொண்டான்.

"ஏனப்பா! ஸந்தோஷ ஸமாசாரம் வந்திருக்கிற ஸ்திதியில் அழுகிறாயே!" என்று அபிமானங்காட்டிய குரலில் துரை கேட்டார்.

ஸோமஸுந்தரத்திற்கு பதிற்சொல்லக்கூடவில்லை. துக்கம் வந்து தொண்டையி லடைத்துக்கொண்டது. மறுபடி துரை ஆச்வாசம் செய்து, தைர்யப்படுத்திக் கேட்கவும், "ஸாஹேபவர்களே! நானென்ன செய்யக்கூடும். என்னுடைய அபிப்பிராயம் போகவேண்டுமென்றுதான் இருக்கிறது. தங்களை யெப்படி கேட்கிறதென்று பயங் கூசுகிறது. உள்ள நாள் உள்ளமட்டும் சம்பளத்தை வாங்கித் தின்றுவிட்டு, சண்டை வந்தவுடன் லீவ் கேட்கிறதென்றால் என்மனமே யெனக்கு இடங் கொடுக்கவில்லை. என்மனதில் இப்பொழுது ப்ரமாத யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது" என்று துக்கத்தால் தழதழத்த குரலில் சொன்னான்.

"கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்கிற அவலாமோ?"

"இல்லை. என்தாயார் துக்கப்படுவதாகக் கேட்க எனக்கு மனம் ஸஹிக்கவில்லை. அதுதான் முதற்காரணம். கல்யாண யோசனையும் இல்லாமலில்லை. பெண்ணும் நல்ல குணவதியாயிருந்து, அவளைக் கல்யாணம் செய்துகொள்ளுவதினால் ஸௌகர்யமும் ஏற்படுவதானால், யார்தான் ஆசைப்பட மாட்டார்கள்? இதுதான் என்மனதின் எண்ணம்.

ஸாஹேப் கோபித்துக்கொண்டாலும் ஸரி." என்று விம்மத் தொடங்கினான்.

"போடா பைத்தியக்காரப் பயலே! எதற்காக அழு கிறாய்? நீ நல்லயோக்யன். உனக்கு ரஜா கொடுத்திருக்கி றேன். போய்வா."

"ஸாஹேப், நிஜமாகவா?"

"நிஜமாக, போய்வரலாமல்லவா?"

தன்னுடைய நன்றியறிவை வெளியிட அவனுக்குத் தகுந்த பதங்கள் கிடைக்கவில்லை. கண்களில் ஜலம் ஆறாகப் புறப்பட்ட, ஸலாம்செய்து உத்திரவு பெற்றுக்கொண்டான்.

பாளையத்தில் தன்னிருப்பிடத்திற்கு வந்து, தன்னு டைய தோழர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, அன்றிரவே ஸோமஸுந்தரம் ஊர்நோக்கி ப்ரயாணமானான்.

---

## அத்தியாயம் 2

இந்த நாளைப்போலல்ல அந்தக்காலங்கள். இருப்புப் பாதைகள் இதற்கு 40-வருஷங்களுக்குப் பிறகு ஆரம்பிக்கப் படப் போகின்றன. நல்லரஸ்தாக்கள் வெகு ஸ்வல்பம். சில விடங்களில் வண்டிகள் போவதற்குக்கூடக் கரடுமுரடான ரஸ்தாக்கள். மழைக்காலம் வந்துவிட்டாலோ கேட்கவேண் டாம் அந்த அநர்த்தத்தை. இந்தமட்டினுமல்ல ப்ரயாணி களுக்குள்ள தொந்திரவு. எங்கேபோனாலும் கொள்ளைக் காரர் பயம். கொலைகள் வெகு ஸஹஜம். இந்த ஸ்திதியா யிருந்ததால், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் போக வேண்டியிருந்தால், ஜனங்கள் ஒருவருக்கொருவர் காத் திருந்து, கூட்டங்களாகத்தான் போகவேண்டும். இல்லா

விட்டால் அன்றன்றைக்குத் திருடர்கையில் தப்பிப்பது தெய்வவசந்தான்.

ஸோமஸுந்தரம் அத்ருஷ்டத்திற் கிடமாய், அன்றைய தினம் ஒருகூட்டம் ப்ரயாணிகள், அவன் போகும்வழியே புறப்படுவதா யிருந்தார்கள். அவர்களுடன் சேர்ந்துகொண் டான் ஸோமஸுந்தரம். அந்தக்கூட்டம் பலபட்டையா யிருந்தது. வண்டிகளில் ஸாமான்களை யேற்றிக்கொண்டு அயலூர் போகிறவர் சிலர். பொதிமாடுகளின்மீது ஸாமான் களைப் போட்டுக்கொண்டு செல்லும் வ்யாபாரிகள் சிலர்; பெரிய மூட்டைகளாகத் தங்களுடைய சரக்குகளைக்கட்டித் தலைமேல்வைத்துக்கொண்டு, அயலூர்செல்லும் சிறுவ்யா பாரிகள் சிலர் ; யாத்ரிகர்சிலர் ; கால்நடையாகச் செல்லும் ஏழை ஜநங்கள்சிலர். இவர்களுள் ஸோமஸுந்தரம்மட்டும் குதிரை மீதேறிவந்தான். அவன் போர்ச் சேவர்களுக் குரித் தான உடுப்புகளைத் தரித்திருந்தான். ஆகையால் அவனுக்கு பயம் அதிகம். ஏனெனில் இப்படிப்பட்டவர்கள் எங்கே யெங்கே யென்று கார்த்துக்கொண்டிருந்தார்கள் பிண்டாரி ஜாதியார்.

இந்தப்ரயாணிகள் கூட்டம் ஸாயங்காலம் புறப்பட்டது. அவர்கள் வெகு மெதுவாய்ச்சென்றார்கள். அநேகம் பெயர் கள் சேர்ந்தகூட்டமாதலால், அதற்குமேல் வேகமாய் அவர் கள் செல்லமுடியவில்லை. ஸாமான்கள் ஏற்றின வண்டிகள் எவ்வளவு வேகமாகப் போகக்கூடுமோ அதற்குமேல் வேகம் போகக்கூடவில்லை. யாராவது சிலபெயர் நின்றுவிடுவார்கள். அவர்களைச் சேர்த்துக்கொண்டுபோகவேண்டும். திடீரென்று ஒருமாட்டுக்குக் கோபம் வந்துவிடும். ‘போகமாட்டே னினி’ என்று படுத்துக்கொள்ளும். சுற்றி நெருப்பை கொளுத்திப்போட்டு அதற்குக் குளிர்காய வைக்கவேண்டும்.

மூக்குப்பொடியை யெடுத்து, கண்களில் ஸமர்ப்பணம் செய்ய வேண்டும். மூக்கையும் வாயையும் கெட்டியாய்ப்பிடித்து, மூச்சுவிடவொட்டாமல் தடுத்து, அதற்கு யோகாப்யாஸம் பழக்கி வைக்கவேண்டும். இவ்வளவு உபசாரங்களிலும் அதன் கோபம் மாறுதிருத்தலும் உண்டு. ஒருவண்டியின் சக்ரத்தின் கட்டு மெதுவாய் விலகி யோடிவிடப்பார்க்கும். யாராவதொருவன் அதன் திருட்டுயோசனையைக் கண்டு பிடித்துவிடுவான். எல்லாருமாகச் சேர்ந்து, அதைக்கற்க ளால் புடைத்து, "யதாஸ்தாநம்ப்ரதிஷ்டாபயாமி" என்று செய்வார்கள். இன்னும் எத்தனை கஷ்டமோ! ஒவ்வொரு அபத்தமும் சீராகும் வரையில் எல்லாரும் காத்திருக்க வேண்டியதுதான். அவர்கள் கொஞ்சதூரம் போவதற்கு முன், பட்டப்பகல்போல நல்ல நிலவுண்டாயிற்று. காற்றென் கிற பேச்சே கிடையாது. மரங்களெல்லாம் கொஞ்சங்கூட அசைவில்லாமல், சித்ரங்களில் எழுதப்பட்டவைபோல் விளங்கின. ஸோமஸுந்தரம் அவர்களுக்கு முன்னாலே ஸவாரி செய்துகொண்டுபோனவன், வெகுதூரம் போய் விட்டோமோவென்று பயந்து, குதிரையைவிட்டுக் கீழேயிறங்கி, ஜநங்கள் வந்த பிறகு போகலாமென்றெண்ணி ரஸ்தாவில் பக்கத்தில் உட்கார்ந்தான். அப்பொழுது அவன்வந்த வழி யில் சங்கூதின சப்தம் காதில் விழுந்தது. அதென்ன சப் தம்? முன்னாலேபோய்க்கொண்டிருப்பவர்களுக்கு அதொரு அடையாளம். ஏதோ வொரு காரணத்தினால் கூட்டம் ஓரி டத்திலேயே நின்றுவிட்டதுஎன்று தெரிந்துகொண்டு, முன் னாலே போனவர்கள், அவர்களுடன் திரும்பிவந்து சேருவ தற்கோ, அல்லது போதுமான ஸமீபத்திலிருந்தால், அப் புறம் போகாமலிருப்பதற்கோ, சங்கூதப்படும். அதைக் கேட்டவுடனே ஸோமஸுந்தரம் யோசிக்கலானான்:— "இவர்களோடு நான் சேர்ந்துபோவதானால், ஊருக்கு எப்

பொழுது போய்ச்சேருகிறது! என்னுடைய குதிரை நல்ல குதிரை. நான்மட்டும் என் முன்னால் போகக்கூடாது. குதிரையைக் களைக்க வைக்காமல் மெதுவாய்ப் போய்க்கொண்டிருந்தால் ஒருவேளை பிண்டாரியார்வந்தாலும், குதிரையை காலப் (Gallop) இல் கிளப்பிவிட்டால் போகிறது. * * * இருந்தாலும் அவர்களுடன் சேர்ந்து போவதே மேன்மை"

இப்படி யவன் யோசித்துக்கொண்டிருக்கும்போதே, ஒரு குதிரையின் காலடிச் சப்தம்கேட்டது. சப்தம் வந்த திசையைநோக்கலும் தன்னுடைய ஸைந்யத்தைச் சேர்ந்த யாரோ வொருவன் ஸவாரிசெய்து வருவதாகத்தெரிந்தது. அவன் கிட்டவரவும் தன்னுடைய தோழன் காதர் என்று வெளியாயிற்று. அவன் கையில் துப்பாக்கியொன்றிருந்தது. ஸோமஸுந்தர மிருந்தவிடம் வந்தவுடன் அவன் 'ஸோமா! நாம் தனியே போவோம் வா. இவர்களோடு நின்று நின்று போக நம்மாலாகாது. இறுக்கம்பிழிகிறது. இதோ பார்! என் சட்டையை. வேர்வைவடிகிறது!" என்றான்.

காதர் கொஞ்சம் இரட்டைநாடி சரீரக்காரன். பளுவான வாதசரீரம். அவனுடைய சட்டையில்மட்டு மல்ல. அவனுடைய முகத்திலும் வியர்வை வெள்ளமாய் ஓடிக் கொண்டிருந்தது. ஸோமஸுந்தரம் சற்று யோசித்து, "உன்னுடைய துப்பாக்கி மருந்திடப்பட்டு ஸித்தமாக விருக்கிறதா?" என்று கேட்டான்.

" ஆம் "

" சரி. அப்படியானால் நாம் போவோம். ஆனாலின்றென்று. அடுத்தவூர் போகும்வரையில் நாமிருவரும் பிரியக் கூடாது. ஸரிதானா?"

ஸோமஸுந்தரம் குதிரையீ தேறிக்கொண்டான். இருவரும் புறப்பட்டார்கள். குதிரைகள் மெதுவான 'ட்ராட்'

போய்க்கொண்டிருந்தன. நிமிஷத்திற் கொருதடவை இருவர்களும் இரண்டுபுறங்களிலும் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றார்கள். இப்படி யரைமணிநேரம் செல்லா முன்னர், அவர்கள் சென்றுகொண்டிருந்த ஸமவெளியைத் தாண்டினார்கள். அதற்குப் பிறகு ஒரு சிறுமலைத்தொடரும், அதற்கப்புறம் ஒரு பள்ளத்தாக்கும், அதற்குமப்புறம் இன்னொரு சிறுமலைத்தொடரும் அவர்கள் பாதையினிடையே வந்தது. இவைகளைத் தாண்டினால் அப்புறம் மறுபடியும் ஸமவெளி. இவர்கள் பள்ளத்தாக்கில் இறங்கின பிறகு, பின்புறமிருந்து பிண்டாரியர் வந்தால், அவர்கள் வருவது இவர்களுக்குத் தெரியாது. ஆகையால் ஸோமஸுந்தரம் காதரைப்பார்த்து "காதர்! அதோ தெரிகிறதே! அந்தக் குன்று! அதன்மீதேறிச் சுற்றிலும் பார்த்துவிட்டு, அப்புறம் போவோம்" என்றான்.

"அதிலென்ன கார்யம்? நாம் நேரே போவோம். அது கிடக்கிறது" என்றான் காதர்.

ஸோமஸுந்தரம் அதற் கிசையவில்லை. "உனக் கிஷ்டமில்லாவிட்டால் நீ முன்னாலேபோ. நான்போய் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, குதிரையைத் திருப்பி, அக்குன்றின்புறமாய் விட்டு, அதன்மீதேறினான். மலைகளின் மீதேறுவதில் அவன் குதிரைக்கு நல்ல பழக்கமுண்டு. வெகு வேகமாய்க் குன்றினுச்சியை யடைந்தான். அங்கிருந்து பார்ப்பானேன்! முப்பது பெயர் பிண்டாரியர், தஞ்சிறு குதிரைகளி லிவர்ந்து நாலுகால் பாய்ச்சலில் அவனிருந்த விடத்திற்கு 100-கஜ தூரத்திற்குள் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களை ஸோமஸுந்தரம் பார்ப்பதன் முன்னம், அவர்கள் இவனைப் பார்த்துவிட்டார்கள். பலமாசக் கூச்சலிட்டுக்கொண்டு குதிரைகளைத் தூண்டிவிட்டார்கள்.

இவனும் தன் குதிரையைத் திருப்பி அதை யதிவேகமாய் ஓட்டிக்கொண் டிறங்கினுன். வரும்பொழுதே, காதரைப் பார்த்து. "ஜாக்ரதை; துப்பாக்கி! துப்பாக்கி! தயார்!" என்று கூச்சலிட்டான். வெகு வேகமாக வோடிக்கொண் டிருக்கும் குதிரையை, முதுகில் தட்டிக்கொடுத்து "என் செல்வமே! இந்த ஆபத்தினின் றும் என்னை வேகமாய் வெளி யேற்று. நடுவில் தடுக்கிவிழுந்தாயோ, வந்துவிடும் மோசம். ஜாக்ரதை. துப்பாக்கி அவனிட மிருக்கிறது. அங்கு கொண்டுபோய் என்னைச் சேர்த்துவிடுவாயாகுல் பிறகு இந் தப் பிண்டாரியர் என்னைக் கைதியாகப் பிடிக்கமுடியாது" என்று சொல்லுவதுபோல் மனதால் பாவித்தான்.

காதர் என்னசெய்தான்? துப்பாக்கியை ஆயத்தம் செய்து வைத்துக்கொண்டு தன் ஸ்நேஹிதன் வரும்வரையில் கார்த்துக்கொண் டிருப்பதைவிட்டு, குதிரையை நாலுகால் பாய்ச்சலில் பிடுங்கவிட்டு அகன்றுன். சவுக்கை தாராள மாய் ஒருஸமயம் இந்தப்புறமும் அந்தப்புறமொரு ஸமயமு மாய் உபயோகிப்பதற்காக, அவன்கை யசைவதும், அதி வேகமா யோடுவதில் குறைந்து மேலே தூக்கப்பட்ட குதிரை வால்மயிரும் தவிர, அதன் காலடியாலெழும் தூளியில், வேறொன்றும் புலப்படவில்லை.

ஸோமஸுந்தரம்பாடு அந்தரமாய்ப் போயிற்று. துப் பாக்கி யிருக்கிறதென்ற நம்பிக்கையால், ப்ரயாணிக் கூட்டத் தாரை விட்டுப் பிரிந்தவன். அந்த வுதவி யிப்பொழுதில் லாமற் போய்விட்டது. ப்ரயாணிகள் பின்னுல் வருகிறுர் களே அவர்கள் பக்கமாவது ஓடிப்பார்ப்போமென்று நினைத் துக் குதிரையைத் திருப்பினுன். அவன் அங்ஙனம் செய் வதைத் தடுப்பதற்காக பிண்டாரிய வீரர்களில் ஆறு அல்லது ஏழு பெயர் குறுக்காக வோடிக் கொண்டிருந்தனர். அவன்

குதிரை நல்ல குதிரைதான்; ஆனால் அவர்கள் குதிரைகள் இன்னும் நல்லவை. அவன் குதிரையைத் திருப்பின திசையில், பிண்டாரியர் வருவதுணர்ந்த சிறுவன் வேறு புறமாகக் குதிரையைத் திருப்பலாமென்று நினைத்தான். ஆனாலது ஸாத்தியப் படுவதாகத் தோன்றவில்லை. குதிரையவ்வளவு வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. இப்படி யவன் இன்ன செய்கிறதென்றறியாமல் ஊசலாடிக் கொண்டிருக்கும் பொழுதே குதிரை ஸோமஸுந்தரத்தை, அவர்களுக்கு ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டது. அக்கூட்டத்தின் முகத்தில் சிவப்பு வர்ணங்கொண்ட குறுந்தாடியுள்ள வொரு பிண்டாரியனிருந்தான். அவனை வெட்டிச் சாய்த்துவிட்டு முன்னாலோடிவிட்டால், பிறகு குதிரைப் பந்தயமாகப் போய்விடுமென்று உத்தேசித்து, தன்னுடைய உடை வாளை யுருவித் தயாராக வைத்துக் கொண்டான். குதிரை இன்னும் இரண்டு கால்லப் போகவேண்டியதுதான் பிண்டாரியர் முகத்தில் நின்றவன் கீழே விழுவான். இதற்குள் பாவம்! ஸோமசுந்தரம் ஏறிவந்த குதிரையை யொருவன் பின்புறமிருந்து சுட்டான். குதிரையின் காலில்பட்டு, குதிரை தடுக்கி விழுந்தது. ஸோமஸுந்தரத்தின் காலொன்று குதிரையின் கீழகப்பட்டுக்கொண்டது.

மெள்ள எழுந்திருந்து விடலாமென்று பார்த்தான். காலை வெளியே (குதிரையின் கீழிருந்து) இழுப்பதன் முன்னம் இரண்டு தடியர்கள் அவனைக் கீழேதள்ளி, கைகளைக் கயிறுகொண்டு பிணிக்க வாரம்பித்தார்கள். அவ்விதம் அவர் செய்யவொட்டாதபடி தடுப்பதற்காக முரண்டினான். சிறிது சிரமத்தின்பேரில் அவர்களிருவரையும் சற்று விலகும்படி செய்தான். ஆயினும் தப்பித்தோட முடியவில்லை. மறுபடி மூன்றுபெயர் ஓடிவந்து கவிந்துகொண்டார்கள். துப்பாக்கியின் அடிப்புறத்தால், தலையில் இரண்டுமூன்று அடி அடித்து

விட்டார்கள். அவனுக்குத் தலை சுழன்று வந்தது. கண்கள் மங்கின. அப்படியே கீழே விழுந்துவிட்டான். பிண்டாரியர் அவனைப் பின்கட்டுமுறையாக நல்ல மணிக்கயிறு கொண்டு கட்டி பலமான முடிப்பும் போட்டார்கள். அவனுடைய சட்டைப்பைகளையெல்லாம் பரிசோதித்தார்கள். அங்கிருந்த பணத்தையு மெடுத்துக்கொண்டார்கள்.

இரண்டு நிமிஷ வேலை இவ்வளவும். பிறகு ஸோமஸுந்தரம், தன்னைச்சுற்றி யென்ன நடக்கிறதென்று பார்த்தறிய சக்தியுள்ளவனானன். தன்னுடைய குதிரையின் கதி யென்னவாயிற்றென்று பார்ப்பதற்காகத் திரும்பினன். ஒரு காலில் குடு விழுந்ததினால், அதற்குக் கால்களைப் பூமியில் போடமுடியவில்லை. ஆகாசத்தில் 'விளுக்கு விளுக்'கென்று உதைத்துக் கொண்டிருந்தது. கீழே விழுந்ததில் அதன் தலையில் பலமான காயமொன்று. அதிலிருந்து ரக்தம் பீரிட்டு வெளிவந்து அது கிடந்த இடத்தைச் சுற்றியிருந்த புழுதியைச் சேறுக்கியது.

பிண்டாரியாரில் ஒருவன் குதிரையண்டைபோய் அதனுடைய ஜேணத்தைக் கழட்ட ப்ரயத்நப் பட்டுக்கொண்டிருந்தான். அந்த ஸமயம் குதிரை யின்னுமதிகமாக உதைக்கத் தலைப்பட்டது, அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. மடியிலிருந்து ஒரு கத்தியை யெடுத்து, குதிரையின் நடுக்கழுத்தில் வெளியே தெரிவதான ச்வாஸக்குழாயை இரண்டாய் அறுத்து விட்டான் 'புஸ்' என்று ஒரு சப்தம் கேட்டது. ஒரு வலிப்பு வலித்தது குதிரை. அப்புறம் எல்லாம் அடங்கிப்போயிற்று. பிண்டாரி ஜேணத்தைக் கழட்டி யெடுத்துக்கொண்டான்.

பிண்டாரியார் ப்ரயாணமானர்கள். குறுந்தாடிக்காரன் குதிரையில் ஏறினன். மற்றவர்களும் ஏறினர்கள். ஸோம

ஸுந்தரத்தை ஒருகுதிரையின்மீது உட்காரவைத்து, அதே குதிரையில் இன்னொரு பிண்டாரி உட்கார்ந்துகொண்டான். அவன் குதித்தோடி விடாமலிருப்பதற்காக, அவனுடைய அரைக்கச்சை (Belt) க்கும் ஸோமஸுந்தரத்தின் அரைக் கச்சைக்கும் வலுவான ஒருகயிறு கட்டப்பட்டது. பள்ளத் தாக்கின் வடபுறமிருந்த தொடர்க் குன்றுகள் மேற்கு பக் கத்தில் முடியுமிடத்து தென்வடலாய் ஓடும் ஒரு பெரிய மலைத்தொடரும் அதன் மத்தியில் சில உன்னதமான ப்ர தேசங்களும் காணப்பட்டது. அவைகளை நோக்கிப் புறப் பட்டது பிண்டாரியர் கூட்டம்.

ஸோமனுக்குத் தலையில் காயம். ரக்தமோடிவந்து, முகங்களிலெல்லாம் உறைந்து கிடந்தது. அதனால் கண் களைத் திறந்துகூடப்பார்த்ததில்லை. ஜேணத்தில் உட்கார்ந்த படி அசைவதற்காவது திரும்புவதற்காவது கூடவில்லை. முகத்தில் உறைந்திருந்த ரக்தத்தைத் துடைக்கவென்றாலோ, கைகள் பிணிக்கப்பட்டிருந்தன.

அவர்கள் வெகுவேகமாய்ப் போய்க்கொண்டிருந்தார் கள். வழி மேடும் பள்ளமுமாக விருந்தது. நடுவில் ஒருநதி யையும் கடக்கவேண்டிவந்தது. இந்தக்காட்டுப் பாதைகள் தாண்டி முடிவில் ஒரு ரஸ்தாவில் வந்து சேர்ந்துகொண்டார் கள். ரஸ்தாவென்றால் இக்காலத்திய பாட்டைகள்போ லிருக்குமென்று எண்ணாதேயுங்கள். அவ்விடத்தில் வண்டி கள் (கட்டை) வெகு கஷ்டப்பட்டுப் போகலாம். அதாவது ‘ கிடுகிடு ’ பாதாளமான பள்ளங்களும் மலைபோல் மேடு களுமில்லாது சுமாராய் ஸமவெளியாகவிருக்கும். அதுதான் அக்காலத்தில் ரஸ்தா.

இப்படி வெகுநேரம் போய்க்கொண் டிருந்தார்கள். சந்த்ரன் அஸ்தமானமாகி இருள்சூழ வாரம்பித்தது. அவர் களும் ஏதோவொரு உயரமானவிடத்தில் ஏறுவதற்காரம்

பிந்தார்கள். அவர்கள் போவதெங்கேயென்று பார்ப்பதற்கு, ஸோமஸுந்தரம் கண்ணை திறக்க முடியவில்லை. நெருப்பு எரிவதாலுண்டாகும் புகை மணம் உண்டாயிற்று. நாய்கள் குலைத்தன, இதனால் அவர்கள் இருப்பிடத்திற்கு ஸமீபம் வந்து விட்டார்கள் என்று தெரிந்தது. இன்னும் அரைமணி நேரத்தில் பிண்டாரியர் தங்குடியிருப்பு வந்து சேர்ந்தார்கள். அருணோதயமாயிற்று.

எல்லாரும் குதிரையை விட்டிறங்கி, ஸோமனையும் குதிரையை விட்டிறக்கினார்கள். அதற்குள் பெண் பிள்ளைகளும் குழந்தைகளும் அவ்விடத்தில் வந்து கூடினார்கள். குழந்தைகளுக்கு ஸோமனைக் கண்டதும் ஆநந்தம் கீச்சென்று கத்தினார்கள். கற்களைப் பொறுக்கி வைத்துக்கொண்டு ஸோமன் மீது ப்ரயோகம் செய்தார்கள்.

பிண்டாரியர் தலைவன் (அவன்தான் குறுந்தாடிக்காரன் அவன் பெயர் கரீம்கான். தேச சரித்திரத்தில் ப்ரஸித்தியடைந்த கரீம்கான் அல்ல. இவன் வேறு) குழந்தைகளை விரட்டிவிட்டு, தன்னுடைய வேலையாளொருவனை விளித்தான். தண்ணீரின் வாஸனையே யறியாததும் அழுக்குப் படிந்ததுமான காலளவு நீண்ட வொரு சட்டையைத் தரித்த ஒரு வேலைக்காரன் அங்கு வந்து சேர்ந்தான். கரீம்கான் அவனிடம் என்னமோ சொன்னான். அவன் போய் ஒரு விலங்கை யெடுத்துக்கொண்டு வந்து, ஸோமஸுந்தரம் கால்களில் அதை யிட்டான். பிறகு அந்த வேலையாள் அவனை யிழுத்துக் கொண்டுபோய், ஸூர்ய வெளிச்ச மென்பதே யில்லாத ஓரறைக்குள் தள்ளி வெளியே பூட்டிக்கொண்டு போய்விட்டான், அங்கிருந்த நாற்றம் ஸோமஸுந்தரத்தினுடைய குடலை வாய்க்குக் கொண்டுவந்தது. மிகவுமயர்ந்திருந்ததால் உட்கார்ந்தால் தாவிலையென்று பார்த்தான்.

## அத்தியாயம் 3

அவனுக் கப்பொழுதிருந்த ச்ரமத்திற்கு, காலதேச வர்த்தமானங்கள் அப்பொழுதிருந்தபடி யில்லாவிட்டால் அயர்ந்து தூங்கிப்போயிருப்பான். இப்பொழுது தூக்கம் வருமா ? வெளியில் என்ன நடக்கிறது பார்ப்போமென்றால், அவ்வறையில் ஜன்னல்கூடக் கிடையாது. சுற்றிப் பார்க்கும்பொழுது சுவற்றில் ஒருவிரல் நுழையக்கூடிய சிறு த்வாரமொன்று தென்பட்டது. அதன் வழியாகவாவது வெளியே பார்ப்போமென்று, கிட்டப்போனான். அது அவன் தலைக்குமீதிருந்தது. அதற்காக பக்கத்திலிருந்த மண்களைத் தோண்டி, ஒருமேடு செய்துகொண்டு, அதன்மீது ஏறிப் பார்த்தான். மலையினுச்சியிலிருந்து கீழே இறங்குவதற்கு ஒரு ரஸ்தா காணப்பட்டது. அந்த ரஸ்தாவிற்கு வலதுபுறமாக ஒரு வீடும் அந்த வீட்டிற்கு முன்புறமாக இரண்டு மரங்களும் தென்பட்டன. வீட்டுவாயிலில் பயங்கரமான தோற்றத்துடன் கன்னங்கரேலென்று ஒருநாய் படுத்திருந்தது. இரண்டு ஆட்டுக்குட்டிகள் சற்றும் கவலையின்றி துள்ளிக் குதித்தோடிக்கொண் டிருந்தன. அப்பால் சற்று தூரத்தில் ஒருகிணறு. அதைச்சுற்றி, தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்த சில ஸ்த்ரீகளும் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருத்தி, பாத்திரத்தில் தண்ணீரை நிரப்பிக் கொண்டு, தலையில் வைத்து, குடத்தை யிரண்டு கைகளாலும் பிடிக்காமலே, கைகளை வீசிக்கொண்டு, வெகுஸாதகமாக, வீட்டுக்குத் திரும்பினாள். முகத்தில் போட்டிருந்த முக்காட்டினால் அவளுடைய முகம் நன்றாய்த் தெரியவில்லை ஸோமசுந்தரத்திற்கு. அவள் நாம் மேலே சொன்ன வீட்டிற்குள் பிரவேசித்தாள்.

சற்றுநேரத்திற்கெல்லாம் வீட்டிற்குள்ளிருந்து கரீம்

கான் வெளியேவந்தான். அவனுடை இன்று வேறுவிதமா யிருந்தது. மேலேபோட்டிருந்தது 'ஜிகிணு' க்கள் வைத்துத் தைக்கப்பட்ட விலையுயர்ந்த சட்டை தலையில் சரிகைக் குட்டை தலைப்பாகை மட்டும் பத்துபேருக்குக் குறையாம லிருக்கும் அரையில் ஒருகச்சை இறுக்கப்பட்டிருந்தது. அதில் வெள்ளிக்கவசமுள்ள 'பிச்வா' (Dagger) ஒன் றிடப்பட்டிருந்தது. வாசலில்வந்து சற்று நின்றான். ஒரு வேலைக்காரன் பக்கமறைவிலிருந்துவந்து அவன் பக்கத் தில் நின்றான். ஏதோ ஸம்ஜ்ஞைகள்செய்து கரீம்கான் அவ னிடம் சிலவார்த்தைகள் சொன்னான். பிறகு இரண்டுபெயர் களும் எங்கேயோ போய்விட்டார்கள். அந்தத்வாரத்தின் வழியாய் அவர்களெங்குபோனார்களென்று ஸோம ஸுந்த ரம் காணமுடியவில்லை.

சற்றுநேரத்திற்கெல்லாம் ஐந்தாறு சிறு பையன்கள் ஸோமன் அடைக்கப்பட்டிருந்த அறைக்கு (அதுகளஞ்சியம்) ஸமீபமாய் வந்தார்கள். அவர்கள் வந்ததை ஸோமன் பார்க்க வில்லை. சத்தம் செய்யாமல் பக்கத்தில் கிடந்த சில கொம்பு களைப்பொறுக்கி, அந்த த்வாரத்திற்குள் நுழைத்தார்கள். ஸோமன் சற்றுத் தப்பினான். இல்லாவிட்டால் அவைகள் அவன் கண்களில் குத்தியிருக்கும். ஸோமன் கூச்சல்போட் டான். அதைக்கேட்டுப் பயந்து பையன்கள் ஓடிப்போனார் கள்.

ஸோமனுக்குத் தாகம் அதிகமாகவிருந்தது. உதடு கள் உலர்ந்தது. தொண்டை காய்ந்துபோயிருந்தது. தீர்த் தம் கிடைப்பதற்குக் கதியொன்றையுங் காணோம் "ஐயோ! யாராவது இருக்கிறானு வென்று பார்ப்பதற்காகவாவது வர மாட்டார்களா?" என்று தன் மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.

அப்பொழுது பூட்டில் சாவி சுற்றப்படும் சத்தம் காதில்

பட்டது. பூட்டுத்திறந்தது. கதவும் திறக்கப்பட்டது. கரீம் கான் எதிர் நின்றான். அவனோடு இன்னொரு மனிதனும் காணப்பட்டான். அவன் நிறம் நல்லகறுப்பு. அவன் கண் களை, சரீரநிறத்திலும் கறுப்பு. நீண்டதாடி ஸந்தோஷந் தவழ்ந்த முகம். அப்பொழுதும் சிரித்துக்கொண்டேதான் இருந்தான். சிரிப்பதற் கொரு காரணம் வேண்டுமென்கிற விதி அவன் ஸம்பந்தப்பட்டமட்டில் இல்லைப்போலும். கரீம் கானைக்காட்டிலும் அதிக விலையுயர்ந்த உடுப்பு அந்தப் புது மனிதன் தரித்திருந்தது. அவன் தலையிலிருந்த பாகையும் கரீம்கானுடையதைப்போல அவ்வளவு பெரிதல்லா விட் டாலும் தலைக்கு நிரம்பப் பெரியதென்றேதான் சொல்ல வேண்டும்.

கரீம்கான் வேறு ஏதோ எண்ணமிட்டுக்கொண்டிருந் ததுபோல் தோன்றிற்று. சாய்ந்த பார்வையாய் வெகு க்ரூ ரத்துடன் ஸோமனைக் கவனித்துக்கொண்டிருந்தான். புதிய மனிதன் நேராகி ஸோமனுடைய ஸமீபம்வந்து, அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்து, மளமளவென்று ஏதோ ஹிந்து ஸ்தானி மழையாகப் பொழிந்தான். இடையிடையே து அச்சாஹிந்து (நீ நல்ல ஹிந்து மனிதன்) என்று சொன்ன வார்த்தைகள் தவிர வேறு ஒரு அக்ஷரமாவது ஸோமனுக்கு விளங்கவில்லை. அவனுக்குப் பேசிக்கொண்டிருக்கவும் அது ஸமயமல்ல “ஐயா! கொஞ்சம் குடிக்கத் தண்ணீர்!” என்று கெஞ்சினான்.

பிண்டாரி மடமடவென்று சிரித்தான். ஸோமன் கேட் பது இன்னதென்று அவனுக்குத் தெரியவில்லை. ‘என்னை விட்டு விடுங்கள்’ என்று அவன் கெஞ்சுவதாக எண்ணிக் கொண்டான். மறுபடியும் இடையிடையே ‘து அச்சா ஹிந்து’ என்ற அக்ஷரங்களைக் கோர்த்து, ஹிந்துஸ்தானி மாலைகளை வர்ஷிக்கத் தொடங்கினான்.

ஸோமன் வாயைத் திறந்து கையினல் தீர்த்தம் வேண்டு மென்று ஜாடைகாட்ட, அம்மனிதன் மடமடவென்று சிரித்துவிட்டு, 'நூர்' என்று பலமாகக் கூப்பிட்டான்.

ஒரு சிறுபெண்பிள்ளை வேகமாயோடிவந்தது. அதற்கு வயது பத்திருக்கலாம். ஒல்லட்டையான சரீரம். வெகு கறுப்பு, முகஜாடைகள் ஸோமனேடு பேசிக்கொண்டிருந் தவனுடையனபோலிருந்தன. அவனுடைய பெண்ணுகத் தானிருக்கவேண்டும். அவள் முகம் அழகு, புத்தி குறு குறுப்பு நிரம்பி இருந்தது. கண்கள் வெகு தெளிவு. அவளுக்கு வெகு அழகான உடைகள் தைத்துக் கொடுக்கப் பட்டிருந்தது. அவளுடைய பெற்றோர்களுக்கு அவள்மீது அளவு கடந்த அபிமானம் போலும். கழுத்தில் பவுன் மாலையொன்று தவிர வேறு ஆபரணங்கள் அணிந்திருக்க வில்லை.

அவளுடைய தகப்பன் ஹிந்துஸ்தானியி லேதோ சொல்ல, அந்தப்பெண்ணேடிப்போய், பாத்ரத்தில் தண்ணீ ரெடுத்துக்கொண்டு, ஒருநொடிப்பொழுதில் திரும்பிவந்தாள். ஸோமன் அதைவாங்கி யருகலானன். குந்திட்டுக்கொண்டு அந்தப்பெண்ணும் உட்கார்ந்து, காட்டிலே யிருந்து அப் பொழுதுதான் பிடித்துக்கொண்டு வரப்பட்ட ப்ராணி நீ ரருந்துவதைப் பார்ப்பதானலெப்படியோ, அப்படி ஸ்வாரஸ் யத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் உட்கார்ந் திருந்தமாதிரியில், முழங்கால்கள் தலைக்குமேல் உயரமா யிருந்தனவென்பதை அவள் கவனிக்கவில்லை. குடித்தான பிறகு பாத்ரத்தை ஸோமன் அந்தப் பெண்பிள்ளையின் புற மாக நீட்டினன். அவள் அதைவாங்கிக்கொண்டு, வெறித்த மலைபடுபோல் (Chanois) பின்புறமாக ஒருகுதிகுதித்தாள். அதைக்கண்ட அவள் தகப்பன் மடமடவென்று சிரித்தான். பிறகு அவன் இன்னுமேதோ கொண்டுவரும்படி யவளுக்

குத்திரவிட்டான். பாத்ரத்தை யெடுத்துக் கொண்டு வெளியேபோய், மரத்தடியில் சிலரொட்டிகளை யெடுத்துக் கொண்டுவந்து, அவைகளை ஸோமன்முன் வைத்துவிட்டு, முன்போல அழகாய் உட்கார்ந்துகொண்டு, ஸோமனை வெறிக்கலானாள்.

சற்றுநேரங்கழித்து, அவர்கள் கதவை முன்போல் பூட்டிக்கொண்டு ஸோமனைத் தனியேவிட்டுச் சென்றார்கள்.

மனோவ்யாதியால் பீடிக்கப்பட்ட ஸோமஸுந்தரத்திற்குப் பிறகு ஒரு நாழிகைபோவது ஒரு யுகமாகவிருந்தது. அப்புறம் ஒருவேலைபாள்வந்து கதவைத்திறந்தான். ஹிந்துஸ்தானியில் என்னமோ சொன்னான். இன்னதென்று அவனுக்கு விளங்கவில்லை. ஆனால் அவன்செய்த சைகைகளால் எங்கேயோ கூப்பிடுவதாகமட்டுந்தெரிந்தது சற்று நேரம் நல்ல காற்றுவது வாங்குவோம் என்று அவனுடன் வெளியே வந்தான். காலில் விலங்கு கனமாகவிருந்தது. ஒருகால் 'சூகை' யேறிற்று. நொண்டி நொண்டி நடந்து சென்றான்.

இப்பொழுதிவன் இட்டுக்கொண்டு போகப்பட்டவழி ஸோமன் இதுவரைப் பார்த்திராதது. முன்னேக்கவும் ஸுமார் பத்து பன்னிரண்டு வீடுகளும் அதைச்சுற்றி யொரு சிறிய தோப்பும் காணப்பட்டது. இன்னம் ஸமீபம் போகவே, அங்கேயொரு வீட்டுவாசலில் மூன்று குதிரைகள் ஜேணமிட்டு நிறுத்தப்பட்டிருந்தன. காஸ்தாரிகள் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். இவர்கள் அவ்விடம் போகவும், அவ்வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தவன், இவர்களைப் பார்த்ததும் நின்று, உள்ளேவரும்படி ஸோமனுக்குச் சைகை காட்டினான். வந்த வேலையாள் வெளியே நின்றான். ஸோமன் உள்ளே நுழைந்தான்.

அவ்வீடு வெளிப்பார்வைக்கு கம்பீரமில்லாமலிருந்தாலும் உள்ளே வெகுகம்பீரமான தோற்றமுடையதாயிருந்தது. சுவர்கள் மழமழவென்று 'ஸன்னகாரை' வைக்கப்பட்டிருந்தன. இரண்டு கட்டில்களும் அவைகளின்மீது பஞ்சுமெத்தைகளும் காணப்பட்டன. ஐந்தாறு கத்திகள் உறையிலிடப்பட்டு தொங்கிக்கொண்டிருந்தன. துப்பாக்கிகள் வெவ்வேறு பருமனுள்ளவை சுவர்களில் மாட்டப்பட்டிருந்தன. கூடத்தில் விலையுயர்ந்த ரத்நகம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. அதில் ஐந்துபெயர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் இரண்டுபெயர் நமக்கு முன்னமேயே பழக்கமானவர்கள். கரீம்கானும் அவன் ஸ்நேஹிதனும். அப்பொழுதவர்களுக்குக் காலைப்போஜநவேளை. ரத்னகம்பளம் விரிக்கப்பட்டிருந்த இடத்திற்கு வெளியில் வெறுந்தரையில் ஸோமனை யுட்காரவைத்தார்கள். அவர்கள் சாப்பாடு முடிவதற்கு வெகுநேரமானாலும், சாப்பாடுமுடிந்ததென்று வைத்துக்கொண்டு மேலே போவோம்.

அதிதிகளிலொருவர் ஸோமனைப்பார்த்து, "உன்னைக் கைதிசெய்தவர் கரீம்கான். உன்னை அப்துல்லாவிற்கு விற்றுவிட்டார். இனி நீ அப்துல்லாவிற்கு ஊழியன்" என்று சொல்லிக்கொண்டே தன்பக்கத்திலிருந்த அப்துல்லாவை, அவர் பெயரை யுச்சரிக்கும்பொழுது சுட்டிக்காட்டினர். அப்துல்லா வென்பவர்தாம் காலையில் கரீம்கானோடு ஸோமனை வந்துபார்த்தது.

அப்துல்லா மடமடவென்று சிரித்து 'தும் அச்சாசிபாயி தும் அச்சாஹிந்து' என்று ஸோமன் புறமாய் கையை நீட்டிச் சொன்னன்.

அவர்கள் சொல்லுவதை ஸோமனிடம் சொல்லுவதற்கும் ஸோமன் சொல்லுவதை யவர்களிடம் சொல்லுவதற்கும்

ஹிந்துஸ்தானி, தமிழ், ஆகிய விரண்டு பாஷையுந் தெரிந்த ஒரு பிண்டாரி *தர்ஜமாக்காரன் அவர்களில் ஒருவன்.

அவனிடத்தில் அப்டல்லா ஏதோ சொல்லவே, அவன் ஸோமனைப் பார்த்து "உன்னை ஊருக்குக் கடிதமெழுதும் படி உத்திர விடுகிறார். உன்னை விடுவிக்கப் போதுமான பணம் வந்தால் உடனே உன்னை இஷ்டம்போல் போவதற்கு விட்டு விடுவதாகச் சொல்லுகிறார்கள்" என்றான்.

சற்று நேரம் ஸோமன் சிந்தாக்ரஸ்தனா யிருந்தான். பிறகு "எவ்வளவு 'பணங்கொடுத்தால் என்னை விடுவிப்பார்?" என்று கேட்டான்.

அவர்கள் ஒருவரோ டொருவர் பேசினார்கள். சற்று நேரம் பொறுத்து தர்ஜமாக்காரன் 'ரூ. 1500' என்றான்.

"முடியாது. என்னாலவ்வளவு கொடுக்க முடியாது"

"ஆனாலெவ்வளவுதான் உங்களால் கொடுக்கமுடியும்?" என்று அப்டல்லா, ஸோமனுக்கு ஹிந்துஸ்தானி அர்த்தமாகா தென்பதையுங் கூட மறந்து, அவனை நேராடிக் கேட்டான். இருந்தாலும் தர்ஜமாக்காரன் அர்த்தத்தை ஸோமனுக்கு விவரித்தான்.

ஸோமன் சற்று யோசித்து "என்னால் கொடுக்கக் கூடியது ரூ.250தான். அதற்குமேல் செம்புத் தூசியும் என்னிடம் கிடையாது" என்றான்.

எல்லாரும் மறுபடி கசமசவென்று தடபுடலாய்ப் பேச வாரம்பித்தார்கள். அப்டல்லா கரீம்கானைப் பார்த்து பல மாய்க் கத்தத் தொடங்கினான். அவனுக்குக் கோபம் வெகுவா யிருந்தது. ஆத்திரத்தில் பேசும்பொழுது எச்சில் கூட கரீம்கானுடைய முகத்தில் தெரித்தது. கரீம்கான், அப்டல்லாவின் கண்கள் அப்புறம் திருப்பப்பட்ட ஸமயத்

* Interpreter.

தில் அவன் புறமாய் முகத்தை வலித்ததைத்தவிர மற்ற ஸம யங்களில் பங்கமில்லாத யோகஸமாதியி லிருந்தான். இவர் கள் கோலாஹலம் சற்று அடங்கினதும் மறுபடியும் தர்ஜ மாக்காரன் "ரூ. 250 எஜமான் போதாதென்கிறார். உன்னை வாங்குவதற்காக அவரே நூறு ரூபாய் கொடுத்தாராம். ரூ. 1500க்குக் குறைந்தால், உன்னை விடுவிக்க முடியாதாம். நீ எழுதாவிட்டால், உன்னை ஒரு ஆழமான பள்ளத்தில் இறக்கி விடுவது மல்லாமல் சவுக்கு கொண்டடிக்கும் படிக் கும் செய்வேனென்கிறார்" என்று சொன்னான்.

இவர்களிடம் பயங் காட்டக் கூடாதென்று ஸோமன் எண்ணினான். தர்ஜமாக்காரனைப் பார்த்து "நீர் சொல் லும். அந்த நாயினிடத்தில் எனக்குக்கொஞ்ச மும் பயமில்லை. என்னைப் பயமுறுத்தி என்னிடம் பணம் பிடுங்கி விடுகிற தென்ற யோசனையைத் தூரக் கட்டிவைக்கச் சொல்லும். எனக்கு நாய்களிடத்தில் என்றைக்கும் பயங் கிடையாது. இனிமேலும் பயப்படப் போகிறதில்லை" என்று கம்பீர மாய்ச் சொன்னான். தர்ஜமாக்காரன், அதை யவரிடம் சொல்ல, மறுபடி கசமசவென்று பேச்சு ஆரம்பித்தது. அப்டல்லா 'அச்சாதீர் ஹிந்து தீர்ஹிந்து' என்று இரண்டு தடவை சொன்னான். அவர்கள் மந்த்ராலோசனை முடிவடை யவும் தர்ஜமாக்காரன் "ரூ. 400 ஆவது கொடுத்தால் தான் விடுவிக்கலாகும் என்று முடிவாகச் சொல்லச்சொல்லுகிறார்" என்று மொழிபெயர்த்தான்.

ரூபாய் இருநூற்றைம்பதுக்குமேல் ஒரு பைஸா கொடுக்கமாட்டேன் என்னைக் கொன்று விடுவீர்களானால் அதுவும் இல்லாமல் போய்விடும். ஜாக்ரதை! யோசித்துக் கொள்ளுங்கள்.

---

## அத்தியாயம் 4

இப்படி இவர்கள் பேசம் செய்துகொண்டிருக்கும் போதே, ஒரு வேலையாள் கூட்டிக்கொண்டுவர, இரட்டை நாடி சரீரமுள்ள ஒரு மனிதன் அங்கு ப்ரவேசித்தான். அவன் கால்களிலும் தளையிடப் பட்டிருந்தது. மனிதர்கள் வருகிற காலடி சத்தம்கேட்டு, அப்புறமாகத் திரும்பிப்பார்த்துக் கொண்டிருந்த ஸோமனுக்கு, அவ்விதம் கொண்டுவரப் பட்டது காதர் என்று தெரியவும் உண்டான ஆச்சர்யம் இவ்வள வவ்வளவல்ல. அவனும் பிடிபட்டான். அவனை ஸோமனுக்குப் பக்கத்தில் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அவர்களிருவரும் தத்தம் கதையைப் பேசிக்கொள்ளவாரம்பித்தார்கள். தான்பிடிப்பட்ட வழியை ஸோமன் ஆதியோடந்தமாகச் சொன்னான். தன்னுடைய குதிரை யோடமுடியாமல் நின்றதையும், துப்பாக்கிச் சூடு தவறினதையும், தான் பிடிக்கப் பட்டதையும் காதர் ஸவிஸ்தாரமாய்ச் சொன்னான்.

கரீம்கான் தர்ஜமாக்காரனிடம் காதரைக் காண்பித்து ஏதேதோ சில வார்த்தைகள் சொன்னான். அதாவது காதர், ஸோமன், இரண்டுபேரும் அப்டல்லாவி னிடத்திலேயே விற்கப்பட்டதாகவும், யாரிடமிருந்து பணம் முதலில் வருகிறதோ அவன் முதலில் விடுவிக்கப் படுவானென்றும் தர்ஜமாக்காரனால் வெளியாயிற்று.

மறுபடி யவன் ஸோமனைப் பார்த்து, "இதோபார் உன்னுடைய தோழனை. உனக்கு மூக்கிற்குமேல் கோபம் வருகிறது. அவனோ சாந்தமாக விருக்கிறான். வீட்டிற்கும் கடிதம் எழுதிவிட்டான். அவனுக்கு ரூ. 2500 வரும். வந்தவுடன் அவன் ஸ்வேச்சையாய்ப் போய்விடுவான். அன்றி இவ்விடத்திலும் அவனுக்கு நல்ல ஆஹாரம் கொடுக்கப்படும். ஸௌகர்ய மாகவும் அவனை நடத்துவார்கள்" என்றான்.

அதற்கு ஸோமன், "என் தோழன் அவனிஷ்டப்படி செய்வான். நான் என்னிஷ்டப்படி செய்வேன். அவன் பணக்காரனாகவிருக்கலாம். நானேழையாயிற்றே. நான் சொன்னதுதான் முடிவு. நீங்கள் வேண்டுமென்றால் என்னைக் கொன்றுவிடுங்கள். அதனால் உங்களுக் கெவ்வித லாபமுமில்லை. நானெழுதுவதா யிருந்தால் ரூ. 250க்குமேல் எழுதமாட்டேன்" என்று மறுமொழி புகன்றான். இந்த வார்த்தைகள் ஹிந்துஸ்தாநியில் தர்ஜமா செய்யப்பட்டன. முடிவில் அப்டல்லா ஒப்புக்கொண்டான். பேனா, மை, காகிதம் முதலிய உபகரணங்கள் கொண்டுவரப்பட்டன.

ஸோமன் தர்ஜமாக்காரனைநோக்கி, "இன்னொன்று, நானிங்கிருக்கும்படி நேருகிறவரையில் ஸரியானபடி நல்ல ஆஹாரம் கொடுக்கவேண்டும். உடுத்தத்துணி ஒழுங்காயிருக்கவேண்டும். எங்களிரண்டுபெயரையும் பிரித்துவிடக்கூடாது. காலிலிருக்கிற விலங்குகளைக் கழட்டிவிடவேண்டும். இவைகளையெல்லாம் எஜமானரிடத்தில் சொல்லு" என்று சொல்லவும், அவனும் அப்படியேசெய்தான். அப்டல்லா "நல்ல ஆஹாரம் தருகிறேன். நல்லவஸ்த்ரம் தருகிறேன். நீங்களிரண்டுபேரும் சேர்ந்தேயிருங்கள். ஆனால் விலங்கை யெடுத்துவிட்டால் நீ யோடிப்போவாய். உன்னை யெனக்கு நன்றாய்த்தெரியும். ராத்ரிவேளையில் வேண்டுமென்றால் தளைகளையெடுத்துவிடச்சொல்லுகிறேன்" என்று சொல்ல, அவ்வாக்யங்கள் ஒழுங்காய் ஸோமனுக்காக மொழிபெயர்க்கப்பட்டன.

ஸோமன் கடிதத்தை யெழுதினான். மேல்விலாஸம் ஸரியாய் எழுதவில்லை. அக்கடிதம் தன்னுடைய தாயார் கையில் போயெட்டக்கூடாதென்பது அவனுடைய எண்ணம். ஸமயம் பார்த்துத் தப்பி யோடவேண்டியதுதான் என்று தீர்மானம்.

எல்லாக்கார்யங்களும் முடிந்தபிற்பாடு, வேலைக்காரர் அவ்விருவரையு மழைத்துச்சென்று ஆதியில் ஸோமனை யடைத்துவைத்திருந்த களஞ்சியத்தில், உள்ளேதள்ளி வெளியே பூட்டிக்கொண்டுபோய் விட்டார்கள். ஆஹாராதி விஷயங்களில் அவர்களுக்கு ஒருகுறைவு மேற்படவில்லை. ராத்ரிகாலங்களில் காற்றளைகள் அவிழ்க்கப்படும்.

---

## அத்தியாயம் 5

இந்தமாதிரி ஜீவனமாக இருவர்களுக்கும் ஒருமாதங் கழிந்தது. பணம் வருவதற்குத் தாமதப்படுவதைக்கண்ட அப்டல்லா, அவர்களுக்கு வரவர சாப்பாட்டு ஸுகத்தைக் குறைப்பதற் காரம்பித்தான்.

காதர் இரண்டாம்முறையு மொருகடிதம் வீட்டிற் கெழுதினன். தினந்தோறும் பணம் வரும் வரும் என்று எதிர்பார்த்திருந்ததன்றி, பணம்வரவேயில்லை. அவனுக்கு உத்ஸாஹம் நாளுக்குநாள் குறைந்துகொண்டே வந்தது. களஞ்சியத்தைவிட்டு வெளியே போகக்கூட அவனுக் கெண்ணமில்லை. உட்கார்ந்திருந்தபடியே தூங்கி விழு வான். விழித்துக்கொண்டால் நாட்களை யெண்ணுவான். இப்படி இவன் பொழுதுபோய்க்கொண்டிருந்தது.

ஸோமனுக்கு விசாரமேயில்லை. அவன் விஷயத்தைக் கவனிக்கவேண்டிய அக்கரையுள்ளவர் அவனுடைய தாயா ரன்றி, வேறொருவருமில்லை. அவன் தாயாருக்கோ கடித மெழுதவில்லை. பணம் வருமென்று எதிர்பார்க்கவுமில்லை. இரண்டாங்கடிதம் எழுதவேண்டிய அவச்யம் அவனுக் கேது ? இல்லை. அவன் மனதில் நினைத்ததாவது " என் தாயாருக்கெழுதினல் அவளெங்கிருந்து ரூ. 250 வாங்கு வாள். மீதமிருந்த பணம் ஸுலபமாய்த் திரும்பமுடியாத

படி பங்கடவு செய்யப்பட்டிருக்கிறது. வயதோ அவளுக்கு அதிகம். எனக்கு நேர்ந்த கஷ்டத்தைப்பற்றிக் கேள்விப் பட்டால் ஏக்கத்தால் ஒருவேளை யிறந்துவிடுவாள். அன்றி யும் பணமனுப்புவதாயிருந்தாலும், பணம்போனவிசாரம் வேறு அவளைப் பீடிக்கும். எல்லாவற்றையும் யோசிக்க நாம் கடிதமெழுதாமலிருந்ததேதான் சிலாக்யம். இருக்கட் டும். மெள்ள ஸமயம் பார்த்து வெளியேறி விடுகிறேன்."

ஆகையால் காலத்தை யெதிர்பார்த்துப் பொறுமையுட னிருந்தானுகையால் அவனுக்கு அதிக துக்கமில்லாமலிருந் தது. அவனுடைய யோசனைமுழுதும் 'எப்பொழுது தப் பிக்கலாம்? எப்படி தப்பிக்கலாம்?' என்ற இரண்டுகேள் விகளுக்கு ஸரியான உத்தரம் கண்டுபிடிப்பதிலேயே சென் றது.

பகல் வேளைகளில் தனக்குத் தெரிந்த பாட்டுகளில் இரண்டொன்றை சிட்டி யடித்துக்கொண்டே, அந்தச் சிறு க்ராமத்திற்குள் சுற்றி வருவான். அல்லாத ஸமயங்களில் பக்கத்தில் வளர்ந்த கொடிகளைப் பிடுங்கி சிறுகூடைகளாக முடைந்தும், களிமண்ணால் வேடிக்கை வேடிக்கையாகப் பல உருவங்கள் அமைத்தும் பொழுது போக்குவான். களி மண் வேலையில் ஸோமனுக்கு ஹஸ்தலாகவம் மிகவும் அதி கம்.

பொழுது போகாத ஸமயங்களுள் ஒரு ஸமயம் களி மண்ணால் பிண்டாரிப் பெண்பிள்ளை தலையில் ஜலம்கொண்டு போவதுபோல் ஒரு பொம்மையொன்று செய்து, அதைக் களஞ்சியத்தின் கூரைமேல் வைத்திருந்தான். அது வெகு நல்ல வேலைப்பாடமைந்ததாக விருந்து உயிருள்ளது போலக் காணப்பட்டது. அந்த வழியாய்த் தண்ணீருக்குப்போகும் பெண் பிள்ளைகள் எல்லாரும் கூரைமேல், இந்த பொம்மை யைப் பார்த்து, மலைத்து நின்றார்கள். அந்தப் பெண்பிள்ளை

கள் அதைப்பார்த்துச் சிரித்து விளையாடிப் பேசிக்கொண்டிருக்கும் ஸமயத்தில் எஜமானன் அப்டல்லாவினுடைய குமாரத்தி நூர் என்னும் சிறுபெண்ணும் அந்தக் கூட்டத்தோடு வந்து சேர்ந்து கொண்டாள். இவைகளை யெல்லாம் கண்டு உள்ளூற ஸந்தோஷமடைந்த ஸோமன் களஞ்சியத்தை விட்டு வெளியே வந்து, கூரையிலிருந்து அந்தப் பொம்மையை யெடுத்து, அவர்களுக்குக் கொடுக்கிற பாவனையாய் அதை நீட்டினன். அவர்கள் சிரித்தார்களே யொழிய முன் வந்து ஒருவரும் அதை வாங்கிக்கொள்ள தைர்யப்படவில்லை. அதைக் கீழே வைத்துவிட்டு, ஸோமன் களஞ்சியத்திற்குள்ளே போய் விட்டான். ஆனல் வெளியில் என்ன நடக்கிறதென்று கவனித்துக்கொண் டிருந்தான்.

உடனே நூர் பாய்ந்தோடி அதை யெடுத்துக்கொண்டு, வீட்டுக்கு ஓடிப்போய் விட்டாள். மறுநாட் காலையில் ஸோமன் வெளியே எட்டிப்பார்த்தான். நூர் அந்தப் பொம்மைக்கு கிழிந்த பலவர்ணமுள்ள கந்தல் துணிகளை வஸ்த்ரமாக வுடுத்தி யலங்கரித்து, அதை மடியில் வைத்துக்கொண்டிருந்தாள். அதைச் சிறு குழந்தையாகப் பாவித்து, தூங்கப் பண்ணும் பாவனையாக தாராட்டும் பாடினள். இந்த ஸமயம் வீட்டிற்குள்ளிருந்து ஒரு வயது முதிர்ந்த பெண்பிள்ளை வந்து, அவளை நிரம்பக் கோபித்துத் திட்டினதுமன்றி அவள் கையிலிருந்த பொம்மையும் பிடுங்கிக் கீழே யெறிந்து, 1-க்கு நூறுக உடைத்து விட்டாள். நூர் துக்கப்பட்டுக்கொண்டே வீட்டிற்குள் போய் விட்டாள்.'

ஸோமன் முன்னையதைக் காட்டிலும் நாஜூக்கான வேலைப்பாடுள்ளதாய் இன்னொரு பொம்மை செய்து நூருக்குக் கொடுத்தான். பிறகொரு ஸமயம் நூர் ஏதோ வொரு மண் ஜாடியைக் கொண்டுவந்து கீழே வைத்து ஸோமனையும் பார்த்து, பிறகு அந்த ஜாடியையும் பார்த்து ஸந்தோஷப்பட்

டாள். இதன் தாத்பர்ய மென்னவென்று ஸோமனுக்கு விளங்கவில்லை. அந்த ஜாடியில் தண்ணீர்தானிருக்கிற தென்று நினைத்தான். இருந்தாலும் அவள் மனதில் என்னவி யிருப்பது என்னதானென்று அறியவேண்டியதற்காக, கிட்ட வந்து அந்த ஜாடியை யெடுத்துப் பார்த்தான். அது நிறை யப் பாலிருந்தது. அதை யெடுத்து குடித்து விடும்படி நூர் ஜாடை செய்தாள். ஸோமன் ஸந்தோஷமடைந்து, அதை யெடுத்துப் பருகினன். அதற்குப் பிறகு தினம் ஒரு தடவை திருட்டுத்தனமாய், நூர் ஸோமனுக்கு ஒரு ஜாடி நிறையப் பால்கொண்டு வந்து கொடுப்பாள். அன்றியும் வீட்டில் என்ன தின்பண்டங்கள் செய்தாலும் அவைகளில் கொஞ்சம் எடுத்து ஒளித்து வைத்திருந்து அதைத் திருட் டுத்தனமாய், ஸோமனுக்குக் கொண்டுவந்து கொடுத்துவிட் டுப் போவாள். இப்படி ஸோமனுக்கு ஆஹார விஷயத்தில் கொஞ்சம் ஸௌகர்ய மேற்பட்டது.

பிறகு ஒருநாள், ஆகாயமிருண்டு, மேகங்கள் திரண்டு, பலமான காற்றுவீசி, பெரிய மழைப்புயல் உண்டாயிற்று. கற்களைக் கூடத் தொளைத்து விடும்படி மழைபெய்து, ஊரெங் கும் ஜலப்ரளயமாகச் செய்து விட்டது. தெருவெல்லாம் முழங்கால் மட்டும் ஜலம் ஓடிக்கொண்டிருந்தது. அன்றைய தினம் ஸோமன் தன்னுடைய எஜமானனிடத்திலிருந்து, வேடிக்கை யொன்று செய்யப்போவதாய், ஒரு கத்திவாங்கி, சில சிறு மரத்துண்டுகளை யெடுத்துச்சீவி, அவைகளால் சிறு சக்ரமொன்று செய்து அதை யோடுகிற தண்ணீரில் சுற்றும் படி நாட்டினன். அன்றியும் அதோடு ஸம்பந்தப்படுத்தி, ஸரியான இடத்தில் இரண்டு பொம்மைகளை நிறுத்திவைத் தான். அந்தச் சக்ரம் சுற்றிவரும்போ தெல்லாம் அந்த இரண்டு பொம்மைகளும் *நர்த்தனம் செய்தன.

---

* Mechanism of a water-mill.

அந்தக்குடியிருப்புமுழுவதும் களஞ்சியத்தைச் சுற்றி வந்து கூடிற்று. சிறு பையன்கள், குட்டிகள், பெண்பிள்ளைகள், ஆண்பாலார் முதலிய அனைவருமங்கு வந்து கூடி, வேடிக்கையைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள். 'அச்சா-சோம-அச்சா - படாபுத்தி—' என்று எல்லாரும் கூச்சல் போட்டார்கள்.

இதைக் கேள்விப்பட்ட ஆப்டல்லாவும் இந்த வேடிக்கையைப் பார்க்கவந்தவன் மிகுந்த வாச்சர்ய மடைந்தான். இதற்கு முன் கொள்ளையடித்து வந்த கடிகாரமொன்று, ஓடாமல், எங்கேயோ ஒருமூலையில் கிடந்தது. அதைக் கொண்டு ஸோமனிடம்கொடுத்து இதை 'ரிபேர் செய்ய முடியுமாவென்று கேட்டான்.' 'என்னமோ பார்ப்போம்' என்று சொல்லியதை வாங்கிப்பார்த்து, அதை யோடும்படி செய்து அவனிடம் மறுநாள் திருப்பிக்கொடுத்தான். இவனுடைய க்யாதி, இம்மூலமாய், அந்தக்ராமம் முழுவதிலும் அயல்க்ராமங்களிலும் பரவிற்று. ஒடிந்தபூட்டு, ரிபேரில் விழுந்த கடிகாரம், உபயோகமற்றுப்போன துப்பாக்கிகள் முதலிய ஸாமான்கள் ரிபேருக்காக, ஸோமனிடத்தில் வந்து குவியலாயின். எஜமான் ஸோமனுக்குச் சில ஆயுதங்களும் வாங்கிக்கொடுத்தான். அவைகளுள் முக்கியமானவை சாமணம், அளவுகருவி, சுத்தியல், அரம் முதலியன.

மற்றொரு ஸமயம் அந்த க்ராமத்தில் ஒரு பிண்டாரிக்கு உடம்பு ஸௌகர்யமில்லாம லிருந்தது. ஜனங்கள் ஸோமனை வந்தழைத்தார்கள். ஸோமனுக்கு வைத்தியசாஸ்த்ரத்தில் பரிசயம் கிடையாது. இருந்தாலும் போய்ப்பார்ப்பதென்று முடிவு செய்துகொண்டான். இவன் மருந்துகொடுத்த முகூர்த்தத்தால், தெய்வீகமாக அவனுக்கு வ்யாதி ச்வஸ்தப்படக்கூடாதா வென்று அவன் எண்ணம்.

காயலாக்காரனைப் போய்ப்பார்த்தான். அவனுக்கென்ன

வ்யாதியென்றே ஸோமனுக்குத் தெரியவில்லை. ஏதாவது பச்சிலைகளைப் பிடுங்கிக்கொடுப்பதில் அவனுக்கிஷ்டமில்லை. ஏதாவது விபரீதமாய் முடிந்தாலென்ன பண்ணுகிறது ? ஆதலால் கொஞ்சம் தீர்த்தம் கொண்டுவரச்சொல்லி, அதில் ஒருகிள்ளு மண்ணைப்போட்டு, ஏதேதோ மந்திரம் ஜபிப்பது போல் மொணமொணவென்று உதட்டையசைத்துப் பாசாங்குசெய்தான். பிறகு இந்த திவ்ய ஒளஷதம் வ்யாதிக்காரனுக்குக் கொடுக்கப்பட்டது. ஸோமன் களஞ்சியத்திற்குத் திரும்பி வந்துவிட்டான். ஸாயங்காலத்திற்குள் வ்யாதிக்காரன் பூர்ணஸௌக்கிய மடைந்தான்.

அவர்களுடைய பாஷையையும் கொஞ்சங் கொஞ்சமாய்க் கற்றுக்கொண்டான். எல்லாருக்கும் ஸ்நேஹிதனானான், அவர்களும் இவனோடு அடிக்கடி வேடிக்கையாய்ப் பேசவருவார்கள். ஸோமன் கவலைபற்றவனாகக் காணப்பட்டான். அவன் அவர்கள் மத்தியில் வஸிப்பது அவர்களுக்குப் பெரிய உபகாரமாகவு மிருந்தது.

இவ்விதம் மற்றும் ஒருமாதம் சென்றது.

---

## அத்தியாயம் 6

பகற்காலம் முழுவதும் அங்கு மிங்குமாய்க் கவலையற்றவன்போல் அலைவதும், தவறினால் ஏதாவது கைத்தொழில் செய்து பொழுது போக்குவதும், இருட்டின பிறகு, தன்னுடைய அறைக்குள் ளிருந்து வெளியே போவதற்கு ஒரு சுரங்கம் தோண்டுவதும் அவனுக்கு வேலையாயின. பின் சொன்னவேலை அவனுக்கு மிகுந்த கஷ்டத்தைத் தந்தது. மலைக்காட்டுப் பூமியாகையால் கற்கள் விசேஷமாய் அகப்பட்டன. எஜமானனுடைய தயவினால் கையில் சில வாயுதங்கள் அகப்பட்டன. அவனுக்கு மிகுந்த ஸாதக

மாயிற்று. அநுப்பென்கிற, பேச்சில்லாமல் வேலை செய்வான். இரண்டொரு ஸமயம் காதர்கூட "எதற்காக வீண் சிரமப்படுகிறாய்? இந்தச் சுரங்கம் முடிந்தாலும் நாம் தப்பித்துக்கொள்ளப் போகிறதில்லை. இரவில் அறையை விட்டு நாம் வெளிப்பட்டுப் போகக்கூடுமென்று வைத்துக் கொள்ளுவோம். அப்புறம் எங்கு போகிறது? எங்கு பார்த்தாலும் பிண்டாரி ஜாதியார் வீடுகளா யிருக்கிறது. நீ சிரமப்படுகிறது தான் மிச்சம்" என்றும் சொல்லிப் பார்த்தான். ஸோமன் அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் குடைந்துகொண்டே யிருந்தான்.

அநேக நாட்கள் சிரமப்பட்டு சுரங்கவேலையை முடித்தான். அந்தத்துவாரத்தை ஒரு பெரிய கல்லினால் மறைத்து வைத்தான். அந்த க்ராமம் கட்டப்பட்டிருந்த மலைமீது எப்பொழுது ஏறி சுற்றும் முற்றுமுள்ள பிரதேசங்களைக் கவனிக்க ஸமயம் நேரிடுமென்று காத்துக்கொண் டிருந்தான். அந்த ஸமயமும் சீக்கிரமே கிடைத்தது.

அப்டல்லா ஒருநாள் எங்கேயோ வெளியூருக்குப் போயிருந்தான். ஆகாயம் அன்று மேகாவ்ருமமாக விருந்தது. பகல் பத்துமணிக்கு ஆகாரம் செய்துகொண்டு மெதுவாய் மலைமேல் ஏறுவதற்குப் போனான். ஆனால் அப்டல்லாவின் வழக்கம் வீட்டை விட்டு வெளியே போகும்பொழுதெல்லாம் தன் மகனைவிட்டு, ஸோமன் தப்பியோடாதபடி ஜாக்ரதையாய் பார்த்துக் கொள்ளச் சொல்லுவது. இப்பொழுதும் அப்படியேதான் செய்திருந்தான். ஸோமன் மலைமீதேறுவதைத் தூரத்திலிருந்து கண்ட அந்தப் பையன் வேகமாயோடி வந்து, "ஸோமா! ஸோமா! அதுகூடாது! என் தகப்பன் உன்னைப் போகக் கூடாதென்று சொல்லியிருக்கிறார். நீ திரும்பி வராவிட்டால் க்ராமத்தாரைக் கூப்பிடுவேன்"

என்றான். இவன் சொன்னது ஹிந்துஸ்தானியில், இப் பொழுது ஸோமனுக்கு ஹிந்துஸ்தானி கொஞ்சம் கொஞ் சம் விளங்க ஆரம்பித்த ஸமயம். அந்தப் பையன் சொன் னவைகளில் சிற்சில வார்த்தைகளைக் கொண்டும், ஜாடை களைக் கொண்டும், அவன் சொன்ன தின்னதென்று ஸோமன் தெரிந்து கொண்டான்.

ஸோமன் அந்தப் பையனைப் பார்த்து, "நான் வெகு தூரம் போகவில்லை. மலைமேல் ஸ்வல்பதூரம் ஏறிக்காற்று வாங்கி வரலாமென்று எண்ணினேன். ஒரு பச்சிலையும் பிடுங்கவேண்டி யிருக்கிறது வ்யாதியஸ்தரை ஸ்வஸ்தம் செய்ய. நீ வேண்டுமென்றால் என்னோடு கூடவா. என் காலில் தளை பூட்டியிருக்கவில்லையா? நான் எங்கே தப் பித்தோட முடியும்? யோசித்துப்பார். நீ புத்திசாலி யல்லவா? கலகம் செய்யாதே. போய் வந்தவுடன் உனக்கு நல்ல வில்லும் அம்புகளும் செய்து தருவேன்" என்று நயமாய்ப் பேசினான். சிறுபையன் அவன்சொன்ன தெல்லாம் வாஸ்தவமென்று நம்பினான். ஸோமனை இஷ் டப்படி போகவிடுத்தான். பூனைபோல் சுறுசுறுப்பாய் (காலில் தளையிருந்தும்) மலையுச்சிக்கேறி, அங்கிருந்து நாலாபுறமும் கவனித்துப் பார்த்தான். தானிருக்கும் களஞ்சியத்தையும், அதற்கெந்தப் புறமாக தினந்தோறும் ஸூர்யன் உதயமாகிற தென்பதையும், தானிருக்குமிடம் களஞ்சியத்திற்கு எந்தப்புற மென்பதையும் நிதானித்து, பிண்டாரிகளுடைய ஆவாஸங்களில் தண்டுப்படாமல் எந் தத் திசையில் ஓடவேண்டுமென்று நிதானித்துக் கொண் டான். ஒன்றற்குள்ள தூரங்களையும், அவைகளிருக்கு மிடத்தையும், அவைகளை யடையாளங் கண்டு பிடிப்ப தற்கு அவைகளின் முக்கியமான அடையாளங்களையும் மனதில் பதிய வைத்துக்கொண்டான். தப்பித்தோடும்

போது ஒருவேளை வழி தவறினாலும், தவறினதைச் சீக்கி ரத்தில் கண்டுபிடித்துக் கொள்ளவேண்டு மென்பதற்காக இந்த முன் ஜாக்ரதை அவன் செய்துகொண்டது.

ஸோமன் கீழே யிறங்கிவந்து, அப்டல்லாவின் குமாரனோடு, சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, பிறகு களஞ்சியத்திற்குள் போய்விட்டான்.

அன்று ஸாயங்காலம் ஐந்துமணிக்கு அந்த க்ராமத்திற்குள் ஒரு பிண்டாரியார் கூட்டம் வந்தது. விசாரிக்குமளவில், பிண்டாரி ஜாதியாரால் வெகுவாய் நேசிக்கப்பட்டவனும், அவர்களுள் ஒரு தலைவனாக விருந்தவனும் மிகுந்த ஸாமர்த்யசாலியுமான வொருவன் இங்கிலீஷ்காரர்கள் விரட்டி யடித்ததில் மரணகாயம் பட்டானென்றும், அவனை ஸ்வஸ்தப்படுத்துவதற்காக, ஜாக்ரதையான இவ்விடத்திற்குக் கொண்டு வரப்பட்டானென்றும் வெளியாயிற்று. ஸோமனை யழைத்துக் காட்டி யப்பெரியவரைக் காப்பாற்ற முடியுமாவென்று கேட்டார்கள். இவனுக்கு வைத்தியம் ஒன்றும் தெரியாவிட்டாலும் யுத்தத்தில் காயம்பட்டவர்களுடைய பழக்கம் உண்டானதையால், அப்பெரியவரைப் பரீக்ஷித்து, இனிப் பிழைப்பதற்கு ஹேது வில்லையென்று, நிரம்பத் தெரிந்தவன்போலச் சொல்லி விட்டான். அன்றிரவு எட்டுமணிக்குள் அவனும் இறந்து போனானென்கிற செய்தி ஸோமன் காதில் விழுந்தது. க்ராமம் முழுவதும் அப்பெரியவரைப் புதைப்பதற்குப் படையெடுத்துச் சென்றது. அவர்கள் திரும்பி வருவதற்கு வெகுநேரம் பிடிக்குமென்று ஸோமனுக்குத் தெரியும். ஆதலால், அவர்கள் எவ்விடத்தில் பிணத்தைப் புதைக்கப் போயிருக்கிறாரோ, அதற்கு வேறு புறமாய் போகக்கூடுமானால், அன்றை யிரவே தப்பித்து விடலாம். அன்றைக்கு அமாவாஸை வேறு.

தன்னுடைய ஆலோசனைகளைக் காதரிடம் சொன்ஞன். காதருக்குக் கொஞ்சங்கூடத் தைர்யமில்லை. "நாமாவது தப்பிக்கவாவது! வழிகூடத் தெரியாதே நமக்கு!" என்ருன் காதர்.

"எனக்கு வழி தெரியும்."

"வழி தெரிந்தாலும் விடிவதற்குள் இந்தப் பின்டாரிகள் அவாஸங்கள் தாண்டிச் செல்லுவதருமையாயிருக்குமே!" என்று காதர் ஆக்ஷேபித்தான்.

"முடியாவிட்டால், காட்டிற்குள்ளேயே மறைவான ஓரிடத்தில் படுத்துத் தூங்குகிறது. இரவு வந்தவுடன் ப்ரயாணம் துவக்குகிறது. இங்கே எத்தனை நாள் இப்படி உட்கார்ந்திருக்கிறது. பணமனுப்புவதா யிருந்தால் முன்னேயே யனுப்பி யிருக்கமாட்டார்களா? அன்றியும் இங்கிலீஷ்கார ஸைந்யம் அவர்களைத் துரத்தியடித்து, பெரியவர்களி லொருவரைக் கொன்றுவிட்டார்களென்று வெகு கோபமா யிருக்கிருர்கள். இந்த ஸ்திதியில் நம்மையும் கொன்று விடுவதாகப் பேசிக்கொண் டிருக்கிருர்கள்."

ஸோமன் கடைசி வாக்கியம் சொன்னது அபத்தம். காதரைப் பயமுறுத்தி வெளிக்கிளப்ப வேண்டுமென்கிற யோசனையால் சொன்னதன்றி வேறல்ல. ஸோமன் சொன்னது வாஸ்தவமென்று பட்டது. யோசித்துப்பார்த்தான். வெளியேறுவது தான் சிலாக்யம் என்று பட்டது.

"ஸரி அப்படியானுல் போவோம் வா" என்ருன்.

---

## அத்தியாயம் 7

தனக்காகவென்று செய்து வைத்திருந்த அந்தச் சுரங்கத்தை கொஞ்சம் அகலப்படுத்த வாரம்பித்தான் ஸோமன். காதரும் ஒத்தாசை செய்தான். பிறகு இரண்டு

பெயருமாக தனித்தனியே நுழைந்து வெளியே வந்தார்கள். தாங்கள் வெளியே வந்தவிடத்தில் அடையாளந் தெரியாமல் அங்கு ஏற்கனவே வைக்கப்பட்டிருந்த கல்லே, மறுபடி யெடுத்து வைத்தான். கீழேயிருந்த மண்சரிந்து கல் திடீரென்று கீழே விழுந்தது. ஸமீபத்தில் அப்டல்லாவின் பயங்கரமான கறுப்பு நாய் படுத்திருந்தது. அது பலமாய்க் குலேக்கவாரம்பித்தது. ஆனல் ஸோமன் அந்த நாயை முன்னமேயே பழக்கி வைத்திருந்தான். மெது வாய் ஒரு சிட்டி யடித்தான். சட்டைப் பையிலிருந்து ஒரு சிறு ரொட்டித்துண்டை யெடுத்து விட்டெறிந்தான். நாய் அதைக்கவ்விக்கொண்டு, வாலேக்குழைத்து ஆட்டிக் கொண்டு நின்றது. அதை மறுபடி படுக்கவைத்தான்.

இருவருமாகச் சற்றுநேரம் களஞ்சியத்தின் சுவரோரமாய் உட்கார்ந்தார்கள். மறுபடி எங்கும் நிச்சப்தமாயிருந்தது. ஒரு ஆடு தும்மிற்று. பக்கத்திலிருந்த வொரு சிற்றருவி கற்களின்மீது சலசலவென்று ஓடும் சத்தம் தெளிவாய் அவர்கள் காதில்கேட்டது. நல்ல இருட்டு. நக்ஷத்ரங்கள் ப்ரகாசமாய் தலேக்குநேராகின்றன.

“ போவோம் வா ” என்று காதரை யழைத்தான் ஸோமன்.

பாதைகள் வெகு கரடுமுரடாகவும் கூரிய கற்கள் நிறைந்து மிருந்தது. காலில் போட்டிருந்த (பூட்ஸ்) ஜோடுகள் மிகவும் சப்தம் செய்தன. ச்ரமமாகவிருந்தாலுமிருக்கட்டுமென்று ஸோமன் அவைகளேக் கழட்டி யெறிந்துவிட்டு, அந்தக் கற்களின்மீது வெகு ஸாதகமாய் நடந்து சென்ருன். நக்ஷத்ரங்களேக்கொண்டு தான் போகவேண்டிய திசையை நிதானித்துப்போனுன். நேரம் செல்லச் செல்ல, காதர் ஸோமனேடுகூட வரமுடியவில்லே. பின் வாங்கலானுன்

" இன்னும் கொஞ்சம் மெதுவாய் நடவப்பா ! என் ஜோடுகள் காலில் கடித்துக் கொப்புளங்களாகிவிட்டன. நடக்க முடியவில்லை " என்று காதர் அழுதுகொண்டே சொன்னன்.

" கழட்டி யெறிந்துவிடேன் சனியனை ! அது இல்லாவிட்டால் இன்னும் ஸௌகர்யமாக விருக்கும் ! நானப்படித்தானே செய்தேன். "

காதர் ஜோடுகளைக் கழட்டிவிட்டு, நடந்தான். இன்னும் அநர்த்தத்திற் கிடமாயிற்று. அது கால்கள் அடிபட்டு எங்கும் காயங்களுண்டாயின. மறுபடி பின் வாங்கலானன். " உன்னுடைய கால்களில் காயம்பட்டால் நாளைக்கு ஆறி விடும். பிண்டாரிகள் கைகளில் அகப்பட்டுக்கொண்டால், சாவுதான் முடிவு என்பதை ஞாபகப்படுத்திக்கொள் " என்று பயமுறுத்திப் பார்த்தான். காதர் பதில் சொல்லா மலே, முனகிக்கொண்டும் முக்கிக்கொண்டும், நடந்து கொண்டே யிருந்தான்.

அதற்கப்புறம் கொஞ்சதூரம்போகவும் ஒரு க்ராமம் போலிருந்த லைந்தாறு வீடுகளின் கூட்டமொன்று காணப் பட்டது. சில நாய்கள் குலைக்க வாரம்பித்தன. அடி வயிற்றில் நெருப்புக் கட்டியதுஸோமனுக்கு. நக்ஷத்திரங் களை யொருதடவை தொட்டுப்பார்த்து, நாய் குலைக்கும் க்ராமத்தின் ஸமீபம் வந்தது அவனுக் காச்சர்யத்தை விளை வித்தது. ஆகாயத்தை யுற்றுநோக்கவும், தான் திசை தப்பிவந்து விட்டதாகத் தெரியவந்தது.

" காதர் ! நாம் வழிதப்பிவிட்டோம். இடது கைப் புறமாகப் போவதற்கு வலதுகைப்புறமாக வந்துவிட் டோம். நல்லவேளையாய் க்ராமத்திற்கு கொஞ்சதூரம் இப்பாலேயே விழித்துக்கொண்டோம். தாமஸம் செய் யாதே திரும்பு " என்றான் ஸோமன்.

"சற்று நில்லப்பா ! ச்ரமபரிஹாரம் செய்துகொள்ளு கிறேன். என்னால் சுத்தமாக நடக்க முடியவில்லை. காலெல்லாம் காயம். ரக்தம் வெள்ளமாக ஓடுகிறது" என்றுசொல்லி உட்கார்ந்தான் காதர்.

காதர் செய்வது ஸோமனுக்கு வெகு ஸங்கடமாக விருந்தது. என்ன செய்கிறது ? அவன் வேண்டுமென்று செய்கிறானா ? நாய்கள் குலைப்போ ஓயவில்லை. அங்கிருப் பது அபாயகரம். காதரைக் கெஞ்சினான்: "அப்பா சற்று நேரம் அவஸ்தையைப் பொறுத்துக்கொள். ஸ்வல்பதூரம் போனால் ஒருகாடிருக்கிறது. அங்கே சற்று நிற்கலாம்."

காதர் வெகு ச்ரமத்துடன் நொண்டி நொண்டி நடந் தான். அவ்விருவரும் ஸோமன் முன்னேசொன்ன காட் டண்டைவந்து சேர்ந்தார்கள். 'அப்பாடா!' என்று கீழேசாய்ந்தான் , காதர். இனியவனால் ச்ரமபரிஹாரம் செய்துகொள்ளாமல் ஒரு அடி எடுத்து வைக்க முடியா தென்று ஸோமன் கண்டான். அவனும் கீழே யுட்கார்ந் தான்.

உட்கார்ந்ததுதான் தாமதம். அந்தக் காட்டிற்குள் வருகிற காலடிச்சத்தம்கேட்டது. இருவருக்கும் திகில் பற்றியது உட்கார்ந்தபடி வெகுவேகமாய்ப் பாதையை விட்டு நகர்ந்து, காட்டிற்குள்போய், பெரியமரங்களினடி யில் புதர்களி லொண்டிக்கொண்டு, மூச்சுக்காற்றுக்கூட வெளியேவிடாமல் உட்கார்ந்திருந்தார்கள். பாதையில் த்ருஷ்டியை செலுத்தினவண்ண மிருந்தார்கள். அந்த சப்தத்திற்கு ஆஸ்பதமாயிருந்த ப்ராணிகிட்ட நெருங்கி வந்தது. அதுபார்வைக்கு குதிரைபோலவு மிருந்தது. குதிரையல்லபோலவு மிருந்தது. உறுமின சப்தமும் கேட்டது. அதென்னவா யிருக்கக்கூடும்? இரண்டுபெயர் ஹ்ருதயங்களும் படக் படக்கென்று அடித்துக்கொண்

டன. ஸோமன் மெதுவாக வொருசிட்டிகொடுத்தான். அவ்வளவுதான்; அது பாதையைவிட்டு, காட்டிற்குள் நுழைந்தது. ஒரு பெரிய புயற்காற்றில் மாக்கிளைகள் முறிவதுபோலச் சத்தம்கேட்டது. காதர் அஸாத்யமாகப் பயந்துகொன்டான். குப்புறப் படுத்துக்கொண்டு கண் களையும் கெட்டியாய் மூடிக்கொண்டான். அது ஓடத் தலைப்படவும் ஸோமன் தைர்யமாய் எட்டிப்பார்த்தான். அது ஒரு கலைமான்!

காதர் தலையைக் கிளப்பவேயில்லை. ஸோமன் அவ னிடம்வந்து "எழுந்திருந்துபார். அது ஒரு கலைமான். அதைக்கண்டு நாம் பயந்தோம். நம்மைக்கண்டு அது பயந்தது. வேறொன்றுமில்லை" என்று சொல்லி முது கில் தட்டிக்கொடுத்தான்.

அந்தக் காட்டுப்பாதையின் வழியாய் அவர்கள் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஸோமன் நான்குபுறத் திலும் சுற்றிப்பார்த்தான். பிண்டாரியர் தன்னைப் பிடித் துக்கொண்டு வரும்போது, இக்காட்டின் வழியாகத்தான் வந்தார்களென்று தோன்றிற்று. ஆதலால் தான் ஊருக் குப் பிடித்துச்சென்ற ராஜபாட்டையில் போய்ச்சேர, இன்னும் ஸுமார் எழுமைல் தூரமிருக்குமென்று தோன் றிற்று. இவ்வளவுசுற்றியும், சுருக்கான பாதையாகவே வந்திருக்கிறோமென்று மகிழ்ந்தான்.

அந்தக்காட்டையும் சீக்கிரம் கடந்து சென்றார்கள். ஸமவெளியான வொரு ப்ரதேசம் முன்னால் காணப்பட் டது. கீழேயுட்கார்ந்துகொண்டு காதர் உன்னிஷ்டம் போல் இனி நீ செய்யப்பா! இனி என்னாலொரு அடியு மெடுத்துவைக்க முடியாது என்றான். ஸோமன் அவனை மெள்ள நல்லவார்த்தை சொல்லிப்பார்த்தான்.

"என்னால் முடியாது!" என்று கண்டிப்பாய் மொழிந்தான்.

ஸோமன் கடிந்து பேசினன். ஒன்றும் பயன்படவில்லை. "ஸரி. அப்படியானல் உன்னிஷ்டப்படிசெய். நான் போகிறேன்" என்று புறப்பட்டான் ஸோமன். காதருக்குப் பயம் ஜாஸ்தியாகிவிட்டது. வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தான். ஸோமனேடு நொண்டி நொண்டி நடந்தான். மறுபடி மூன்று மைல் ப்ரயாணம் செய்தார்கள்.

குதிரையின் கால் லாடங்கள் கற்களின்மீதுபட்டு சப்தமுண்டாயிற்று. பூமியில் படுத்துக் காதுகொடுத்து, ஸோமன் கவனித்தான். குதிரைதானென்று நிச்சயமாயிற்று. பாதையைவிட்டுவிலகி, புதர்களின் மறைவில் பதுங்கி யொடுங்கிக்கிடந்தார்கள். உத்ஸாகமாக ஹிந்துஸ்தாநியொன்று பாடிக்கொண்டு, ஒருபிண்டாரி ஸவாரி செய்துகொண்டு வந்தான். அவன் வெகுதூரம் போன பிறகு, ஸோமன் எழுந்து, காதரிடம்வந்து, எழுந்திருக்கச் சொன்னன். காதர் எழுந்திருந்தான். கீழேதள்ளிவிட்டது "என்னலே முடியவில்லையே! ஐயோ! என் சரீரத்தில் துளி பலமில்லாமற் போய்விட்டதே!" என்று கூச்சலிட்டான்.

ஸோமன் மெள்ள அவன் புஜங்களைப் பிடித்துத் தூக்கிவிடப்பார்த்தான். "ஐயோ! என்னைவிடு! உடம்பு வலிக்கிறதே!" என்று அழுதான் காதர். ஸோமனுக்கு நிர்ஜீவனய்ப் போய்விட்டது.

"இதென்ன பெரிய கஷ்டகாலமாய்ப்போய் விட்டது! இவனலேயோ முடியவில்லை. ஸ்நேஹிதனை நடுப் பாதையில் விட்டுப்போவதும் ந்யாயமாகத் தோன்றவில்லை.

ஐயோ ! தெய்வமே ! என் என்னைப் பரிசோதிக்கிறாய் ?" என்று துக்கித்தான்.

" ஸரி. அப்படியானால் என்னுடைய முதுகில் ஏறிக் கொள். நானுன்னைத் தூக்கிக்கொண்டு போகிறேன் " என்றான் ஸோமன். காதர் அவன் மீதேறிக்கொண்டான். "மென்னியை யப்படி இறுக்கிப் பிடிக்காதே ! மூச்சுவிட முடியவில்லையே ! தோளைப் பிடித்துக்கொள் !" என்று ஸோமன் சொல்லிக்கொண்டே நடந்தான்.

மூட்டை வெகு பளுவாயிருந்தது. அடிக்கடி முதுகி லிருந்து நழுவிற்று. தூக்கித் தூக்கிவிட்டுக் கொண்டான் ஸோமன். இப்படி கொஞ்சதூரம் ப்ரயாணம் நடந்தது.

" உடம்பு வலிக்கிறதே !" என்று காதர் கூச்சலிட் டது அவ்வளவுதூரம் போன பிண்டாரியின் காதில் விழுந் தது. திரும்பிக் குதிரையை விட்டுக்கொண்டு வந்தான். இவர்களுக்குக் குதிரையின் காலடிச் சத்தம் நன்றாய்க் கேட்டது. திகிலடைந்தார்கள். "அடே ! இந்தச்சனியன் ஒன்றைத் தூக்கிக்கொண்டதாலல்லவோ இந்தக் கஷ்டத் திற்குட்பட்டேன். இல்லாவிட்டால் நான் முன்னமே பத்ரமானவிடம் போயிருப்பேனே " என்று தன்னையே நொந்துகொண்டான். அப்படி இருவரும் ஒளித்துக் கொண்டார்கள். சற்றுநேரத்திற் கெல்லாம், குதிரை போவதுபோல் காலடிச் சத்தம் வரவரக் குறைய வாரம் பித்தது. ஐந்து நிமிஷங்களுக் கெல்லாம் அந்தச் சத்தமே கேட்கவில்லை.

" நல்ல வேளையய்யா ! தொலைந்தான் சனியன் " என் றான் காதர்.

"தொலைந்தா னென்றா வெண்ணுகிறாய் ? தானொரு வனாகவிருப்பதால் பயந்து, இன்னம் சிலபிண்டாரி நாய்

களைச் சேர்த்துக்கொண்டு வருவதற்காகப் போயிருக்கிருன். ஆள் நிதானம் பார்ப்பதற்காக வல்லவா அவன் திரும்பிவந்தது! இன்னும் அரைமணி நேரத்திற்குள் நாம் மூன்று மைல்தூரம் போகா விட்டால் நம்முடைய கதி அதோகதிதான்" என்று ஸோமன் வியஸனித்தான்.

"அப்படியானல் நீயாவது தப்பித்து ஓடிப்போய் விடு. என்னல் முடியாது போலிருக்கிறதே."

ஆபத் காலத்தில் ஒரு ஸ்நேஹிதனை விட்டுப் போக முடியுமா? "கிடக்கிறது. இந்த ரொட்டியைக் கொஞ்சந் தின்னு. ஸ்வல்ப பலம் கொடுக்கட்டும்; இப்பொழுது ஓட வேண்டிய ஸமயம்" என்று சொல்லி, தன்சட்டைப் பையிலிருந்து சில ரொட்டித் துண்டுகளை யெடுத்து ஸோமன் காதர் கையில் கொடுத்தான். அதையவன் வாங்கித்தின்றுகொண்டிருந்தான்.

ஐந்தாறு குதிரைகள் வேகமாக வருகிறசப்தம் அவர்கள் காதில் விழுந்தது. மறுபடி யோடி யொளிந்தார்கள். பிண்டாரிகள் அவர்கள் ஒளிந்து கொண்ட விடத்திற்கு வந்தார்கள். அவர்களோடு வந்த இரண்டு நாய்கள் அங்கேயே நின்று விட்டன. அவர்களும் குதிரையை நிறுத்தினர்கள். நாய்கள் மோப்பம் பிடித்துக்கொண்டு எங்கும் தேடலாயின. அவ்விருவரையும கண்டுபிடித்து விட்டனர். பின்கட்டு முறையாகக்கட்டி குதிரையில் ஏற்றிக் கொண்டு வந்தவழியே திரும்பினர்கள்.

---

## அத்தியாயம் 8

காதரும் ஸோமனும் களஞ்சியத்தை விட்டுத் தப்பியோடி இரண்டுமணி நேரஞ்சென்ற பின்னர், பிண்டாரிகள் கிழப் பெரியவரைப் புதைத்துவிட்டு வீடுதிரும்பினர்

கள். யாது காரணத்தினுலோ, கைதிக ளிருவரையும் போய்ப் பார்த்துவர வேண்டுமென்று அப்டல்லாவிற்குத் தோன்றி, அவன் களஞ்சியத்தி னண்டைக்கு தீபவெளிச் சத்துடன் வந்து சேர்ந்தான். வாசற்படிக்கு முன்போட் டிருந்த கல் பள்ளத்திற்குள் விழுந்து கிடந்த கதவைத் திறந்து பார்த்தான். இருவரையுங்காணேம்.

உடனே நான்கு பேர்களைச்சேர்த்துக்கொண்டு குதிரை யேறி அவ்விருவரையும் தேடிக்கொண்டு புறப்பட்டு விட் டான் அப்டல்லா. பக்கங்களில் எங்கேயாவது ஒளிந்திருப் பார்களோ என்ற ஸந்தேஹத்தின் பேரில், அவ்விடங்களி லெல்லாம் மற்ற க்ராமத்தார்களைத் தேடும்படி உத்திர விட்டான்.

வெகுதூரம் இவர்கள் ஸவாரிசெய்தார்கள். பொழுது விடியுந் தருணத்தில் இவர்களை யெதிர்த்து ஒரு குதிரை வீரர் ஸமூகம்வந்து கொண்டிருந்தது. அது கவனிக்கப் பட்டவுடன் அப்டல்லா சிட்டி யடித்தான். அந்த ஸமூ கத்திலிருந்து அதற்கு ப்ரதிசிட்டி கேட்டது. அதுவும் ஒரு பிண்டாரியார் ஸமூகமென்று தெரிந்துகொள்ளப்பட் டது. இரண்டு ஸமூகமும் ஸமீபித்தன. அவர்களுக் கிடையே காதரும் ஸோமனும் கைதியாக்கிக் கொண்டு வரப்படுவதையும் அப்டல்லா கவனித்தான். இரண்டு ஸமூகத்தாரும் கலந்து பேசிக் கொண்டார்கள். அப் டல்லா, இப்பொழுது அவர்களால் கைதியாகக் கொண்டு வரப்படு மிருவரும் தன்னுடைய அடிமைகள் என்றும் தானே பணங்கொடுத்து கரீம்கானிடம் அவர்களை வாங் கினதாகவும் சொல்லவே, அந்த ஸமூகத்தார் அப்டல்லா வின் துணைவரிடம் அவ் விருவரையும் ஒப்பித்தார்கள். பிறகு சிறிதுதூரம் எல்லோரும் சேர்ந்துவந்தார்கள். அதன் பிறகு ஒருகூட்டம் தங்கள் க்ராமத்தை நோக்கிப்

பிரிந்தது. அப்டல்லா முதலியவர் தம்முடைய க்ராமத்தை நோக்கிச் செல்லலானார்கள்.

ப்ரயாணம் முழுவதும் அப்டல்லா சிரிக்கவே யில்லை. ஸோமன் பேசவேயில்லை. காதர் தலைகுனிந்த வண்ணமாக விருந்தான்.

இவர்கள் க்ராமத்திற்குள் வந்து சேர்ந்த வுடனே. க்ராமத்தார்கள் அங்குவந்து கூடினார்கள். அப்டல்லா அப்பொழுதுதான் பேசவாரம்பித்தான். "மறுபடி கடிதமெழுதுங்கள். உங்களை விடுவிக்கப் பணம் இன்னும் பதினைந்து நாட்களுக்குள் வராமல் போயிற்றோ, உங்களைக் கட்டி வைத்துப் புளியமிலாறுகொண்டு உரித்து விடச்சொல்லுவேன். மறுபடி தப்பித்தோட ப்ரயத்நம் செய்ததாகத் தெரிந்ததோ, ஆட்டை யுரிப்பது போல் உங்கள் தோலை யுரித்துவிடச் சொல்லுவேன். பத்திரம்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான். பிறகு ஒரு வேலையாள் வந்து அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு போய், 12 அடி நீளம் 12 அடி ஆழம் 12 அடி அகலமுள்ள ஒரு படுகுழியில் இறக்கி விட்டுப் போய்விட்டான். பழைய விலங்குகளும் கால்களில் இருவருக்கு மிடப்பட்டன.

---

## அத்தியாயம் 9

இப்பொழுதுதான் ஜெயில் அவதிகள் முழுவதும் அவ்விருவரையும் வருத்த ஆரம்பித்தன. காலில் பூட்டிய விலங்குகளை ஒருபொழுதும் எடுக்கிறதேயில்லை. அவர்களை அந்தப் படுகுழியி லிருந்து வெளியில் எடுப்பது மில்லை. வெயிலோ மழையோ பனியோ எல்லாம் அவர்கள் தலையில்தான். கீழே மிகவும் ஈரமாயிருந்தது. அவ்விடத்தில் நாறமோ அஸஹ்யம். காற்றோட்டமென்கிற நாமதேய

மும் கிடையாது. பாதிவெந்ததும் வேகாததுமாய், அல்லது முற்றிலும் கருகின ரொட்டித் துண்டுகளைக்கொண்டு நாய்க்கு எறிவதுபோல் குழிக்குள் போடுவார்கள். ஒரு தகரப் பாத்ரத்தில் கயிறுகட்டி ஜலம் குடிப்பதற்குவேண்டுமானல் குழிக்குள் ளிறக்குவார்கள். இப்படி யாயிற்று இவர்கள் கதி.

காதருக்கு உடம்பு அஸௌகர்யமாயிற்று. அவனுடைய சரீரம் இன்னும் உப்புஸமாயிற்று. ஸதாகாலமும் முக்கவும் முனகவும் தலைப்பட்டான். மிகுந்த வேளைகளில் தூங்குவான். ஸோமனுக்குக் கூட வரவர ஸ்வாரஸ்யம் தப்புவதற் காரம்பித்துவிட்டது. தப்புவதற்கு எதுவும் வழியிருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. இந்த ஸ்திதியில் வெகுகாலம் ஜீவனுடன் இருக்க முடியா தென்றுமெண்ணினன்.

இந்த மாதிரி மானக் குறைவுடன் சிந்தாக்ரஸ்தனாக மெய்மறந்து ஸோமன் குழியினடியில் உட்கார்ந்திருக்கையில் மேலிருந்து ஏதோ வொருவஸ்து அவன் மடியில்வந்து விழுந்தது. மறுபடி இன்னென்று. அப்புறம் இன்னென்று. முடிவில் நாலைந்து கொய்யாப் பழங்கள் (முதலில் விழுந்தவை நல்ல முதல்தரமான ரொட்டிகள்). நிமிர்ந்துபார்த்தான்; முகத்தையுள்ளே யிழுத்துக்கொண்டு ஓடிப்போனள் நூர். அவளைக் கூப்பிடலாமென்று யோசித்தான். வாய்கூட எடுத்துவிட்டான். உடனே அடக்கிக்கொண்டு பேசாம லிருந்து விட்டான். மறுபடி நூர் வந்து முகத்தைக் காட்டுவாள் என்று எதிர் பார்த்து உயரவே பார்த்துக்கொண்டிருந்தான். நூர் வெளி வரவேயில்லை. "இவளால் நமக்கு உதவி ஏற்படக் கூடாதா?" என்று நினைத்து யோசனையி லழுந்தினன்.

யோசனை நின்று ஸ்வயஞாபகம் வந்தவுடன் அக்

குழியில் ஒரு புறத்தில் சிறிது மண்ணைத்தோண்டிப் பிசைந்து, அதனால், குதிரைக்குட்டி, நாய்க்குட்டி, ஆட்டுக் குட்டி, முதலியன செய்தான். "மறுபடி நூர் வந்தால் நூர் எடுத்துக்கொண்டு போகும்படி இவைகளை மேலே போடுவேன்" என்று நினைத்துக்கொண்டு அவைகளைக் காயவைத்தான்.

மறுநாள் முழுவதும் நூர் அந்தக் குழிப்புறமாகவே, வரவில்லை. ஆனால் க்ராமம் முழுவதும் இரைச்சலும் சத்த மும் அதிகமாகக் கேட்டது. அஸ்தமனவேளையில் கோயி லுக்கு அநேகம் குதிரைகள் போகிற சத்தம் கேட்டது. (இக்குழி கோயிலுக்குப் பக்கத்தில்தான்). பிறகு வெகு ஜனங்கள் நடமாடுவதும் தெரிந்தது. ஸுமார் முன்னூறு ஜனங்கள் வரை கோயிலுக்குட் சென்றார்கள். சற்று நேரம் சப்தமில்லாம லிருந்தது. மறுபடி வெகு இரைச் சல்போட்டு அவர்கள் ஏதோ வொரு விஷயத்தைப் பற்றி வ்யவஹரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஸோம னுக்குப்பட்டது. என்ன விஷயமாக விருக்கக்கூடும்? கோயிலோரமாய் நின்று செவிகொடுத்துக் கேட்டான். இங்கிலீஷ்காரர், கைதிகள், இரண்டுவார்த்தைகள்தாம் அடிக்கடி காதில் விழுந்தன. ஸோமன் யோசித்தான்; "இங்கிலீஷ்காரர்கள் இவர்களிருக்குமிடத்தைக் கண்டு பிடித்து ஸமீபத்தில் வந்திருக்கக்கூடும். அவர்கள் கிரா மங்களுள் நுழைந்து கைதிகளை விடுவித்தால், கைதிகள் தாங்கள்பட்ட பாடுகளையெல்லாம் அவர்களிடம் சொல்லி யழுவார்கள். அப்பொழுது இங்கிலீஷ்காரருக்குத் தங்க ளுடைய நிஜயோக்யதை (பிண்டாரிகள் தாம் என்று) தெரிந்துவிடும். அதற்காக கைதிகளை யென்ன செய்ய லாம்?" என்று அவர்கள் கூட்டங்கூடி யோசித்ததாக ஸோமன் எண்ணினான்.

ஒருநாழிகை கழித்து கோயில் 'மீட்டிங்' கலைந்த தாகத் தெரிந்தது. எல்லோரும் எங்கேயோ போய் விட்டார்கள். க்ராமம் எப்பொழுதும்போல் சாந்தமா யிருந்தது. வழக்கத்தைக்காட்டிலும் இன்னும் நிச்சப்தமா யிருந்த தென்று கூட ஸோமனுக்குத் தோன்றிற்று. இதென்ன முடிவுசெய்யுமோ வென்று கவலையுற்று உட் கார்ந்திருந்தான். அப்படியே தூக்கம் வந்தது. சற்று அடிவிழுந்தான். இச்சிறு தூக்கத்திற்குள் ஒரு ஸ்வப்நம் தோன்றிற்று. அந்த ஸ்வப்நத்தில் நூர் என்ற சிறுபெண் அங்கு வந்ததாக அவனுக்குத் தோன்றிற்று. இந்த ஸமயத்தில் தலையொரு ஆட்டம் ஆடி குழியி னொருபக்கத் தில் முட்டி, விழித்துக்கொண்டான். நூரையும் காணேம். ஒருவரையுங் காணேம். மறுபடி தூக்கித்து அயர்ந்தான் ஸோமன். மேற்புறத்திலிருந்து அவன்மீது மண்கட்டி உதிர்ந்தது. நிமிர்ந்துபார்த்தான். நூர் நின்றுகொண் டிருந்தாள். 'இதென்ன! இந்தப் பாழும் ஸ்வப்நம் இன்று என்னைத் திருப்பித்திருப்பி வருத்துகிறது!" என்று நினைத்தான். ஸ்வப்நமா? இல்லை. நூர்தான். உடனே தான் பக்கத்தில் வைத்திருந்த மண் பொம்மைகளை யெடுத்து அவளுக்குக் கொடுப்பதாக உயர எறிந்தான். ஆனால் அவள் அந்தப் பொம்மைகளைக் கண்ணெடுத்துக் கூடப் பார்க்கவில்லை. "எனக்கு அவைகள் வேண்டாம்." என்று மெதுவாய்ச் சொன்னாள். அவனுக்கு ஆச்சர்ய மாய் விட்டது. சற்றுநேரம் சும்மா நின்றுவிட்டு பிறகு நூர், "ஸோமா! உன்னைக் கொன்றுபோட வேண்டு மென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்"

"யார் சொல்லிக்கொள்ளுகிறார்கள்?" என்று பாபாப் பாய்க் கேட்டான் ஸோமன்.

" என்னுடைய தகப்பனாரும், இவ்விடம் வந்த வேறு சிலரும். எனக்கு நிரம்ப துக்கமாயிருக்கிறது."

"உனக்கு நிஜமாகத் துக்கமானல், ஒரு பெரிய மூங்கில் கொண்டுவந்து கொடு," என்றான் ஸோமன். அவள் முடியாதென்ற பாவனையாய்த் தலையையாட்டினாள். மறுபடி ஸோமன் 'அம்மா! தயவுசெய்! கட்டாயம் ஒரு மூங்கில் கொண்டுவரவேண்டும்" என்று கெஞ்சினான்.

"என்னால் முடியாது! நான் கொண்டுவந்தால், என்னை எல்லாரும் பார்த்துவிடுவார்கள். அப்போது எனக்கு அடிவிழும். என்னால் முடியாது" என்று சொல்லிக் கொண்டே ஓடிப்போய் விட்டாள்.

அஸ்தமித்து, மேலே என்ன நடக்குமோ வென்றஞ்சி அடிக்கடி உயரப்பார்த்துக் கொண்டிருந்தான் ஸோமன். வரவர இருள் அதிகமாகிக் கொண்டிருந்தது. வெகு பயங்கரமாக விருந்தது. ஒருவேளை ஸௌகர்யமாக விருந்தால் நூர் ஒரு மூங்கில் கொண்டுவரமாட்டாளா வென்று யோசனை இதுவரை அவன் மனதில் தோன்றிக்கொண்டிருந்தது. ஆனல், அவ்விருட்டைக் கவனித்த ஸோமனுக்கு " ஏது! வரமாட்டாள்! இந்த இருட்டில் வெளியே வரப் பயப்படுவாள்." என்று இப்பொழுது தோன்றிற்று.

இராத்திரி ஐந்துநாழிகை யாயிற்று. அப்பொழுது மறுபடி மேலேயிருந்து களிமண் கட்டிகள் விழுந்தன. உயரப்பார்த்தான். நூர் நின்றுகொண்டிருந்தது தெரிந்தது. அவள் கையில் ஒரு மூங்கிலிருந்தது. அதை மெதுவாக ஸோமன் பக்கமாய்க் கீழே இறக்கினாள். "ஸோமா! ஸோமா! மெதுவாகப் பேசு." என்றாள் நூர்.

" என்ன விசேஷம் ?"

" க்ராமத்தில் இரண்டேபேர்கள்தா மிருக்கிறார்கள்.

வேறெல்லாரும் வெளியே போய்விட்டார்கள்" என்று நூர் சொன்னாள்.

ஸோமனுக்கு நூதனமாக ஒருபலம் சரீரத்தில் உண்டாயிற்று. "இன்னொருமுறை யொருகை பார்ப்போம். புறப்படு" காதரைநோக்கி ஸோமன் கூறினான். "கொஞ்சம்கூட இருந்த விடம்விட்டு நகரமுடியாத நான் எப்படி தப்பித்தோடுவேன்" என்று கண்களில் நீர் மல்க, மெலிந்த குரலில் காதர் சொன்னான். "ஸரி. நானாவது போகிறேன். என்னை வ்யத்யாஸமாக வெண்ணக்கூடாது. நான் போய்வருகிறேன். கடவுள் உனக்கு அனுக்ரஹிப்பாராக" என்று சொல்லி, கால் விலங்குடன் மூங்கிலில் ஏறினான். ச்ரமமாகவிருந்தது. இரண்டு மூன்று ஸமயம் தவறி விழுந்துவிட்டான். மறுபடி ஏறினான். காதர் மெதுவாய்த் தூக்கிவிட்டான். தட்டியடித்து பள்ளத்தின் உச்சிக்கு வந்துசேர்ந்தான். நூர் அவனைப்பிடித்து மெள்ள இழுத்தாள். கரையேறினான் ஸோமன்.

"அம்மா! அந்த மூங்கிலை இருந்தவிடத்தில் கொண்டு போய் வைத்துவிடு. இல்லாவிட்டால் நடந்ததைக் கண்டு கொள்ளுவார்கள்" என்று ஸோமன் சொன்னான். அவள் மூங்கிலை யெடுத்துக்கொண்டு, மெதுவாகக் காலடி யெடுத்து வைத்துப்போனாள். ஸோமன் விலங்கை மெள்ளத் தரித்து விடலாமென் றெண்ணி, ஒரு கல்லையெடுத்து, அதிற் பூட்டியிருந்த பூட்டை யுடைக்கப்பார்த்தான். பூட்டு வெகு கெட்டியா யிருந்தது. முடியாதுபோல் தோன்றிற்று. விலங்கோடு ஓடுவோ மென்று ஸித்தாந்தம் செய்து கொண்டு புறப்பட்டான். மறுபடி யாரோ தன்னிடம் வருவதாகச் சத்தம்கேட்டது. படக் படக் என்று அடிக்கும் ஹ்ருதயத்துடன் அந்தப்புறம் திரும்பி விழித்தான். நூர்! அவள் கையில் ஒருகல்லைக் கொண்டுவந்தாள்.

"எங்கே! பார்ப்போம்! பூட்டெங்கே?" என்றுள் நூர். அவளாலும் முடியவில்லை. திரும்பி வந்துவிட்டாள் நூர். ஸோமன் அவளுக்கு ஆயிர மாயிரமாய் வந்தனமளித்து, தானும் புறப்பட்டு விட்டான்.

முன்ன மொருமுறை ஸோமன் நடந்துசென்ற வழியின் சிரமத்தை மறுபடியும் வர்ணிப்பது எனக்கு இஷ்டமில்லை. வழியில் குறுக்கிட்ட வொருநதியைத் தாண்டினன். பிறகு ஒரு காட்டண்டை வந்து சேர்ந்தான். அதையும் தாண்டிச்சென்றுன். ஸூர்யோதயமாகும் ஸமயமாயிற்று. இன்னும் அரைமைல் போகவேண்டும். அதோ தூரத்தில் இங்கிலீஷ்காரருடைய ஸைந்யம் பாளையமிறங்கியிருப்பதைக் கண்டான். இந்த அரைமைலையும் தாண்டிவிட்டால் அப்புறம் ஸ்வயேச்சைதான் ஸோமன். ஆனல் இந்த அரைமைலும் ஐம்பதுயோசனை தூரம்போலிருந்தது. குதிகால்களில் புண்ணுக வலி யுண்டாகியிருந்தது. கண்டச்சதைகள் களைத்து ஒடுங்கின. பத்தடி சேர்ந்தாற்போல நடக்கமுடியவில்லை. நடுவில் சற்றுவது உட்கார்ந்து ச்ரமபரிஹாரம் செய்துகொள்ள வேண்டியிருந்தது.

இந்த ஸந்தர்ப்பத்தில்தான் நடந்துவந்த பாதையின் இடதுபுறத்தில் ஸ்வல்பதூரத்தில் ஒரு பெரியதும் 30 கஜம் நீளமுள்ளதுமான பாறை படர்ந்திருந்தது. அதற்கப்புறத்திலிருந்து ஆஹாயத்தில் புகை கிளம்பிக்கொண்டிருந்தது. இதேது இந்தப்புறம் புகையென்று ஸோமன் யோசித்தான். அவனுக்குப் பகீரென்றது. இங்கிலீஷ்காரர் ஸைந்யம் என்ன செய்கிறதென்று கவனிக்கிறதற்காக சில பிண்டாரிகள் ஒளித்திருப்பார்களோவென்று எண்ணினன். பயம் உண்டாகிவிட்டது. நூதனமாக வொருபலம் அவனுக்குண்டாயிற்று. இங்கிலீஷ் ஸைந்யமிருந்த பக்கமாகப் பாய்ந்தோடினன். இவனைப்பிண்டாரியர்களிலொரு

வன் பார்த்துவிட்டான். உடனே மூன்றுபெயர் வெளியே கிளம்பி ஸோமனைத் தொடர்ந்தார்கள். ஸோமன் கூச்ச லிட்டான். பிண்டாரியர் நாலுகால் பாய்ச்சலில் குதிரை களை முடுக்கிவிட்டார்கள். ஸோமனுக்குக் கண்தெரிய வில்லை. அவன் அந்த ஸமயம் அவன் ஓடினது அவனுக்கே யாச்சர்யமாயிருந்தது. அதோ கிட்ட வந்துவிட்டார்கள் பிண்டாரியர். அடுத்தநிமிஷம் ஸோமன் பிடுபட்டுவிடுவான்.

இந்த ஸமயத்தில் அவ்விடத்திற்கு இங்கிலீஷ் ஸைந் யத்திலிருந்து நான்குவீரர் குதிரையேறி யவ்விடம் வந்தார் கள். முதலில் ஸோமன் போட்ட கூச்சல் அந்த ஸைந் யத்திலிருந்தவர் காதுகளில் விழுந்தது. உடனே இந்த வீரர் நால்வரும் ஒரு பள்ளத்தாக்கின் வழியாய் மறைந்து வந்து திடீரென்று அப்பிண்டாரியர் முன்னம் தோன்றி னர். இதைக்கண்ட பிண்டாரியர் சரேலென்று குதிரை யைத் திருப்பிக்கொண்டு போய்விட்டார்கள்.

ஆபத்து நீங்கிற்றென்று ஸோமன் தெரிந்தவுடனே அப்படியே களைத்துக் கீழேவிழுந்து மூர்ச்சித்தான். இங்கி லீஷ் வேலையைச்சேர்ந்த போர்வீரர் அவனை வந்து சூழ்ந்து கொண்டார்கள். அவனுக்கு ஸ்மரணை யில்லையென்று தெரிந்தது. அவனை யப்படியே குதிரைமீதேற்றிக்கொண்டு பாளையத்திற்குப் போய்விட்டார்கள். அங்கே அவனுக்கு சைத்யோபசாரங்கள் செய்ததன்பேரில் ஸ்வய ஞாபகம் வந்தது. அவனுக்கு வேண்டிய ஆஹாராதிகளைக் கொடுத்த னர்.

பிறகு வேலையின் முக்கிய உத்யோகஸ்தர்கள் இந்த சமாசாரத்தைக் கேள்விப்பட்டு, அவ்விடம் வந்தார்கள். அவர்களுள் ஒருவன் ஸோமன் எந்த ஸைந்யத்திலிருந்து பிரிந்து வந்தானோ அந்த ஸைந்யத்திலிருந்து, இப்பொழு இங்குபாளையமிறங்கியிருக்கிற படைக்குமாற்றப்பட்டவன்.

அவன் வந்து பார்த்தவுடனே, ஸோமன் என்று தெரிந்து கொண்டு, ஆவலுடன் அவனைத் தழுவிக்கொண்டான்.

ஸோமன் க்ஷேமலாபங்களைப்பற்றி யவன் விசாரிக்க, அவன் அனைத்தையும் ஆதியோடந்தமாய்ச் சொல்லி முடித்தான். பிறகு அந்த உத்யோகஸ்தன் வேலையைவிட்டு ஸோமன் பிரிந்து வந்ததும் அவனுடைய தாயார் இறந்து விட்டதாகவும், இறக்கும்பொழுது 'ஸோமா! ஸோமா!' என்று அலறி யிறந்தாளென்றும் அவளுக்கு ஸோமன் வேலையைவிட்டுப் பிரிந்தும், தன்னிடம் வந்து சேராதது மிகுந்த வியப்பையும் பயத்தையும் உண்டுபண்ணிய தென்றும் சொல்லக்கேட்ட ஸோமன் மனம் பதறியது.

"ஸ்வாமி! பகவந்! உம்முடைய திருவிளையாடலோ விது! கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்றும் தாயாரைத் தரிசிக்கவேண்டுமென்றும் அவாவோடு ஊருக் குத்திரும்பிய எனக்கு எத்தனை விதமான இடர்களை விளை வித்தாய்! போகட்டும்! வெளியில் வந்தவுடனேயாவது என்தாயாரைப் பார்க்கும்படியான பாக்யத்தையெனக்குக் கொடுக்கக்கூடாதா? என் பெயரையே சொல்லிக்கொண்டு என்னுடையகதி யென்னவாயிற்றோ வென்ற மனக்குறை யுடன், நானும் அவளுடைய உத்தரக்ரியைகளை நடத்து வதற்குப் பக்கத்திலில்லாமல், அவளிறந்ததைக் கேட்கவும் என்னுடைய மனம் பதைக்கிறதே!" என்று பலவாறாய்த் துக்கிக்கலானான்.

என்ன செய்யலாம் பாவம் கடவுளுடைய இச்சை யது. அதை நிவர்த்திக்க யாராலாகும். எல்லாரும் அவ னுக்குத் தகுந்தஸமாதானம் கூறித்தேற்றினர். ஒருவாறு மனந்தேறின ஸோமன் "கடவுளே! நான் விவாஹம் செய்துகொள்ளுவதில் உமக்கு ஸம்மதமில்லைபோலும். இல்லாவிட்டால் என்னை யேன் இவ்வித கஷ்டங்களுக்

குள்ளாக்கவேண்டும்? ஆகையால் நீராக மனமிரங்கி, எனக்குவிவாஹமாகும்படி செய்கிறவரையில் நான் விவாஹம் செய்துகொள்ளுவதில்லே. இது நிச்சயம்" என்று மிருந்த ஆளுமையுடன் சொன்னான்.

மறுபடியும் ஸைந்யத்திலேயே சேர்ந்துகொண்டான். அதற்குப்பிறகு இரண்டொரு வருஷகாலத்திற்குள்ளாக தீரத்திற்கும் வீரத்திற்கும் பெயர்போனவனாக, க்யாதி பெற்று விளங்கினான். ஸேனையிலும் ஒரு உத்தியோகத் தின் மேலுத்யோகமாய் அவனுக்குப் பிரமோஷன் கிடைத் துக்கொண்டே வந்தது. வெள்ளைக்காரர்களுக்கு மட்டு மென்றுத் தனியாய் வைத்திருக்கும் உத்யோகங்களி லொன்றுகூட இவனுக்குக் கொடுக்கப்பட்டதாகச் சொல் லிக் கொள்ளுகிறார்கள்.

பிண்டாரி யுத்தத்தில் மிகுந்த ப்ரஸித்தி பெற்றான். தன்னிடமொப்புவிக்கப் பட்டிருந்த சிறுபடையொன்றை கூட்டிச்சென்று, அப்டல்லாவகையரு ஜனங்களிருக்கு மிடத்திற்குப் படையெடுத்துச்சென்றான். அங்கிருந்தவர் கள் ஒருவரையாவது அவன் க்ரூரமாய் நடத்தவில்லை. ...ார் என்பவனை மறுபடி கண்டு அவனுக்குத் தன்னுடைய தளகர்த்தன் மூலமாய்ச் சிபார்சுசெய்து, அப்டல்லா ஸுகமாய்ப் பயிரிட்டு ஜீவனம் செய்யும்படியாக சிறிது நிலமும் கவர்ன்மெண்டாரிடமிருந்து வாங்கிக்கொடுத்தான்.

இவனுக்கு முப்பத்திரண்டாவது வயதில் கல்யாணம் நடந்தது. மூன்று வருஷங்களுக்குள் ஒரு ஆண் குழந்தை யும் பிறந்தது. அதன் பிறகு அவனுக்கு மஹானந்த தசை. அந்த மஹானந்த தசையைத் தனிமையில் அநுப விக்கும்படி யவனை விட்டு, நாம் பிரிவோம்.

முற்றிற்று.